No. 74- 26th. Street
Rangoon

Regd. No. 2569

# ஹிபாஜத்துல் இஸ்லாம்

حفاظة الاسلام

மலர் 4 செந்தமிழ் மாதசஞ்சிகை இதழ் 6

# HIFAZATH-UL-ISLAM

ஹிஜ்ரீ 1352 ஸபர் மீ 1933 ஜூன் மீ

உள்ளடக்கம்.



சென்னை
ஹிபாஜத்துல்இஸ்லாம் சங்கத்தாரின்
வெளியீடு

K. R. SARMA

# ஹிபாஜத்துல் இஸ்லாம்

## சந்தா விபரம்

| | | |
|---|---|---|
| இந்தியா, பர்மா ஸிலோன் முதலிய உள் நாடுகளுக்கு ... | ரூபா | 3 0 0 |
| பினங்கு, சிங்கப்பூர், மலாயா முதலிய வெளிநாடுகளுக்கு ... | „ | 4 0 0 |
| தனிப் பிரதி ... | „ | 0- 4 0 |

ஒரு வருஷத்திற்கு குறைந்து பத்திரிகை அனுப்பப்படமாட்டாது.

## நிபந்தனைகள்

1. சந்தாதாரர்களாகச் சேருகிறவர் முன்பணம் செலுத்தியாவது, வி. பி. யிலாவது பத்திரிகையைப் பெற்றுக்கொள்ளவேண்டும்.

2. சந்தாதாரர்கள் கடிதம் எழுதும்பொழுதும், மணியார்டர் அனுப்பும்பொழுதும் தங்கள் சந்தா நம்பரை அவசியம் குறிப்பிடவேண்டும். பதிலறிய விரும்புவோர் ஸ்டாம்பு அனுப்பவேண்டும்.

3. ஒரு வருஷத்திற்கு இடையில் சந்தாதாரராகச் சேருவோர் இஷ்டப்பட்டால் முந்திய மாதங்களின் சஞ்சிகைகளையும் கிரயம் கொடுத்துப் பெற்றுக்கொள்ளலாம்.

4. விஷயதானஞ் செய்ய விரும்புங் கனவான்கள் எளிய நடையில் ஒரே பக்கத்தில் மிகத் தெளிவாக எழுதி அனுப்பவேண்டும்.

5. மததூஷணையான விஷயங்களும், வீண் தர்க்கங்களை யுண்டு பண்ணும் வியாசங்களும், ஆளைக்குறித்துத் தாக்கி எழுதும் வியாசங்களும், பத்திரிகையின் நோக்கத்திற்கு மாறுபாடான வியாசங்களும் பிரசுரிக்கப்படமாட்டா.

6. எந்த வியாசத்தையும் நிறுத்திக்கொள்ளவும், திருத்திக்கொள்ளவும், சுருக்கிக்கொள்ளவும் ஆசிரியருக்கு உரிமையுண்டு.

மானேஜர்,

**“ ஹிபாஜத்துல் இஸ்லாம் ” ஆபீஸ்,**

43-A, போஸ்டாபீஸ் தெரு,

**G. T.,** மதராஸ்.

Best copy available






# ஹிபாஜத்துல் இஸ்லாம்

நிச்சயமாக நாம் அ(ந்த இஸ்லாம் மதத்)தைக் காப்பாற்றுவோம். [குர்ஆன்]

ஆசிரியர்:—மௌலவீ A. R. அப்துர்றஹீம் ஸாஹிப் (பாக்கவி)

| மலர் 4 | ஹிஜ்ரி 1352 ஸபர் மீ<br>1933 ௵ ஜூன் மீ | இதழ் 6 |
|---|---|---|


(அளவற்ற) அருளாளனும் (நிகரற்ற) அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருநாமத்தைக்கொண்டு (இதனை ஆரம்பிக்கிறோம்.)

## ஸூரத்துத் தக்வீர்.

1. சூரியன் சுருட்டப்படும்போது,

2. இன்னும் நக்ஷத்திரங்கள் உதிர்ந்து போகும்போது,

3. இன்னும் மலைகள் பறந்து திரியும் போது,

4. இன்னும் கெற்பத்தையுடைய ஒட்டகங்கள் வெறுமையாத் திரியும்போது,

5. இன்னும் காட்டு மிருகங்கள் ஒன்று சேர்க்கப்படும்போது,

6. இன்னும் கடல்களில் கொந்தளிப்பு ஏற்படும்போது,

7. இன்னும் உயிர்ப்பிராணிகள் ஒன்றோடொன்று சேர்க்கப்படும்போது,

8. உயிருடன் புதைக்கப்பட்ட சிறுமி கேட்கப்படும்போது,

9. என்ன பாவத்திற்காகக்கொலை செய்யப்பட்டாளென்று,

10. இன்னும் பட்டோலைகள் பரத்தப் படும்போது,

11. இன்னும் வானத்தின் திரை நீக்கப் படும்போது,

12. இன்னும் நரகமானது எரிக்கப்படும் போது,

13. இன்னும் சுவர்க்கமானது சமீபமாக் கப்படும்போது,

14. ஒவ்வொரு மனிதனும் தான் எதைக் கொண்டு வந்திருக்கிறானென்பதை அறிந்து கொள்வான்.

15. எனவே, பின்னடைந்து போகிறவைகளைக் கொண்டு பிரமாணஞ் செய்கிறேன்.

16. நேரே செல்கிறவை, மறைந்துபோகக்கூடியவை,

17. இன்னும் இரவுகழியத் தொடங்கும் போது அதைக்கொண்டு (பிரமாணஞ் செய்கின்றேன்)

18. வெளுக்கும்போது அதிகாலையைக் கொண்டும் (பிரமாணஞ் செய்கிறேன்)

19. நிச்சயமாக இந்த குர்ஆனனது சங்கையானதூதர் (ஜிப்ரயீல்) வாயிலிருந்து வந்ததாகயிருக்கும்.

20. பலம் போருந்தியவர், அர்ஷுடைய வனிடத்தில் உயர்பதவிபெற்றவர்,

21. (யாவருக்கும்) தலைவர், அவ்விடத்தில் (யாவராலும்) நம்பிக்கைக் கோள்ளக் கூடியவர்,

22. தவிர உங்களுடைய தோழர் (நபி) பயித்தியகாரராக இருக்கவில்லை.

23. அவர் (உங்களுடைய தோழர்) அவரை (ஜிப்ரயீலை) தெளிவான உதயத்தில் கண்டிருக்கிறார்.

24. அது மறைவானதை மறைத்துவைக்கும் உலோபித்தனம் செய்வதா யிருக்கவில்லை.

25. இன்னும் குர்ஆன் எறியப்பட்ட ஷைத்தானுடைய சோல்லாக இல்லை.

26. ஆகவே நீங்கள் எங்கு செல்கின்றீர்கள்?

27. இதுவோ உலகோருக்கு உபதேசஞ் செய்யக்கூடியதாக யிருக்கிறது.

28. உங்களில் நேரான பாதையில் தறிபட நாடுகிறவனுக்கு,

29. மேலும் சர்வலோகங்களுக்கும் ரப்பாகிய அல்லாஹ் (தஆலா) நாடினாலொழிய நீங்கள் (நேர்வழியை) நாடமாட்டீர்கள்.

[அதாவது, சூரியனின் ஒளி மங்கி அது பிரகாசமற்றதாக ஆய்விடும்போது, நக்ஷத்திரங்கள் ஒளிவற்று அது கீழே விழும்போது, மலைகள் பூமியைவிட்டு அகன்று அது காற்றில் பறந்து திரியும்போது, சூலுடைய ஒட்டகங்களை யாரும் கவனியாததால் அது வெறுமையாய் அலைந்து திரியும்போது, மானிடனைக்கண்டு விறண்டோடக் கூடிய காட்டு மிருகங்கள் ஒன்று சேர்க்கப்படும்போது, கடல் கொதித்து அதில் கொந்தளிப்பு ஏற்படும்போது, உயிர்ப்பிராணிகள் ஒன்றுசேர்க்கப்படும்போது, உயிருடன் புதைக்கப்பட்ட சிறுமி எது காரணத்திற்காகக் கொலைசெய்யப்பட்டாளென்று கேட்கப்படும்போது, நன்மை தீமைகளின் பட்டோலைகள் திறக்கப்படும்போது, வானத்தை மறைத்துக்கொண்டிருக்கும் திறை நீக்கப்படும்போது, நரகம் தூண்டி எரிக்கப்படும்போது, சுவர்க்கம் சமீபமாக்கப்படும்போது ஒவ்வொரு மனிதனும் தான் எதை அங்கு கொண்டுவந்திருக்கிறான் என்பதை அறிந்துகொள்வான். ஆகவே, குர்ஆன்ஷரீபானது சங்கையான தூதர் ஹஸ்ரத் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் மூலம் நம்மால் அனுப்பப்பட்டதென பிரமாணமாகக் கூறுகின்றேன். அந்த தூதர் செவியுற்றதை மறந்துவிடாத பலம்பொருந்தியவராகவும், ஆர்ஷை யுடையவனிடத்தில் பெரும் பதவி வகிக்கக்கூடியவராகவும், அவ்விடத்திலுள்ளவர்களுக்குத் தலைவராகவும், யாவராலும் நம்பிக்கை கொள்ளக்கூடியவராகவுமிருக்கும். தவிர உங்களுடைய தோழராகிய நபியானவர், பைத்தியக்காரராக யிருக்கவில்லை. அவர் ஜிப்ரயீலை தெளிவான உதயத்தில் கண்டிருக்கிறார். மேலும் அந்த குர்ஆன் ஷரீபானது மறைவுதலான விஷயங்களை வெளிப்படுத்திக் கூறுவதில் உலோபித்தனம் செய்வதாக யிருக்கவில்லை. அந்த குர்ஆன் ஷரீபானது எறியப்பட்ட ஷைத்தானுடைய வார்த்தையுமல்ல. இந்நிலைமையில் நீங்கள் நேரான பாதையை விட்டு வழி தவறி எங்கு செல்கின்றீர்கள்? குர்ஆன் ஷரீபானது உலகோருக்கு உபதேசஞ் செய்யக்கூடியதாக யிருக்கிறது. அதாவது உங்களில் நேரான பாதையில் செல்ல நாடுபவனுக்கு. மேலும் சர்வ லோகங்களின் ரப்பாகிய அல்லாஹ் தஆலா நாடினாலொழிய நீங்கள் நேர்வழியை நாடமாட்டீர்கள் என்பதே.]

இத்திரு அத்தியாயம் மக்கியாம். இதில் மறுமைநாளில் நிகழக்கூடிய சம்பவங்களை தக்கமுறையில் எடுத்து விவரிக்கப்பட்டிருப்பதுடன் ஆரம்பத்தில் ‘குவ்விரத்’ சுருட்டப்படுவது அதாவது, வானம் சுருட்டப்படுவதன் விஷயம் குறிப்பிடப்பட்டிருப்பதால் இஃது ‘ஸூரயேதக்வீர்’ சுருட்டப்படுவதன் அத்தியாயம் என்னும் திருப்பெயருடன் விளங்கி வருகிறது.

ஒரு நாளன்று அமீருல் முஃமினீன் ஹஸ்ரத் அபூபக்ர் ஸித்தீக் (ரலி) அவர்கள், எம்பெருமானார் நபிகள் திலகம் (ஸல்) அவர்களை நோக்கி, அல்லாஹ்வின் ரசூலே! விருத்தாபிய திசையானது தங்கள்மீது தீபரஞ்செய்து விட்டது; அதாவது நாங்கள் எதிர்பார்த்ததற்கு மாறாய் இவ்வளவு சீக்கிரம் தங்களின்



60-வது பிராயத்தில் தங்களுக்கு விருத்தாப்பியம் தோன்றிவிட்டது எங்களுக்குப்பெரும் ஆச்சரியமாக யிருக்கிறதெனக் கூறினார்கள். அதற்கு எம்பெருமானார் நபிகள் திலகம் (ஸல்.) அவர்கள், இந்த அத்தியாயத்திலும் இதைச் சார்ந்த இன்னும் நான்கு அத்தியாயங்களிலும், நபிமார்களுக்கு விரோதஞ் செய்வது கொண்டு மானிடன் மீது ஆண்டவனுடைய வேதனை இறங்குகிறதெனக் கூறப்பட்டிருப்பதால், இவைகளைக் கேட்டவுடன் எனது உம்மத்துகளின் மீது எவ்வாறான வேதனை ஏற்படப்போகிறதோ வென்னும் துக்கமானது என்னை விர்த்தாப்பிய திசையிலாக்கி விட்டதெனக் கூறினார்கள்.

உலகம் நாசமாய் அழிந்துபோவதற்குள்ள அடையாளமாக இவ்வத்தியாயத்தில் பன்னிரு விஷயங்கள் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அப்பன்னிரு அடையாளங்களும் நிகழ்ந்து விடுமாயின், அதுகாலை ஒவ்வொரு மனிதனும் தான் எதைக் கொண்டு வந்திருக்கிறான் என்பதை அறிந்துகொள்வான். அப்பனிரண்டில் ஆறேறுவெனில், முந்திய ஸூர் ஊதியவுடன் நிகழ்ந்துவிடும். மீதமுண்டான ஆறும் இரண்டாவது ஸூர் ஊதுவதற்குப் பிறகு ஏற்படும். அப்பன்னிரு அடையாளங்களும் நிகழ்வுற்றபின் உலகின் பெயர் நாமமும், யாதொரு அடையாளமும் இல்லா தொழிந்து விடும்.

1. சூரியன் சுருட்டப்படுமெனக் கூறப்பட்டிருக்கிறது. அதாவது, உலகின் நாலு பாகங்களிலும் வீசிக்கொண்டு பூமி முழுவதையும் பிரகாசிக்கச் செய்து கொண்டிருக்கும்படியான அதன் ஒளியானது மங்கி பிரகாசமற்றதாய் விடும்.

2. நக்ஷத்திரங்கள் ஒளிமங்கியதாக கீழே உதிர்ந்து விடும் எனக் கூறப்பட்டிருக்கிறது.

3. மலைகள் பூமியை விட்டுக் கிளம்பி கொட்டப்பட்ட பஞ்சேபோன்று காற்றில் அங்குமிங்கும் பறந்து திரியுமென்றும் கூறப்படுகின்றது. எனவே, சூரியனுக்கு இக் கெதி ஏற்பட்டு நக்ஷத்திரங்களுக்கு இச்சம்பவம் நிகழ்ந்து பூமியின் முகட்டிற்கு ஆபத்து நேரிடுங்கால், பூமியின் விறிப்புக்கு முளைகளே போன்று அமைந்துள்ள மலைகள் காற்றில் பறக்கும்போது அப்பூமியில் வசிக்கக்கூடிய மானிடனுக்கு, வியாபாரம் ஆஸ்த்தி ஐஸ்வரியம் முதலிய எவ் வஸ்துக்கள் மீது விருப்பமேற்படப் போகிறது? அவன் எந்த வஸ்துவை காப்பாற்றி வைக்கவேண்டு மென்று எண்ணங் கொள்ளப் போகிறான்? ஆகவே மானிடன் அவைகளி லொன்றையும் கவனிக்காமல் தனக்கு யாது சம்பவிக்கப் போகின்றதோ என்பதையே சிந்தித்துக் கொண்டிருக்குங்கால், சூலுடைய ஒட்டகத்தையுங் கூட கவனியாதிருப்பதன் காரணமாக அது பல யிடங்களிலும் அலைந்து திரியும்; அதனை யாரும் திரும்பிக்கூட பார்க்க மாட்டார்களென இதன் நான்காவது வாக்கியமூலம் அறிவிக்கிறான். (ஒட்டகம் அராபியர்களின் பிரதான சொத்தாகும். அதிலும் சூலுடைய ஒட்டகத்தை அவர்கள் அன்போடு வளர்த்து வருவார்களாதலின் அல்லாஹ்த ஆலா அதைக் குறித்து இங்கு விளக்குகின்றான்.)

5. காட்டில் வசிக்கும் மிருகங்கள் மனிதனைக் கண்டு விரண்டோடுவதும் அவைகளிற் சிலது, சில மிருகங்களைக் கண்டு ஓடுவதும் இதுகாலை சகஜமாயிருந்து வருகிறது. ஆனால் முந்திய ஸூர் ஊதியவுடன் அவைகளுக்குப் பெரும் திகில் ஏற்பட்டு அவைகள் வசிக்கும் கானகத்தை விட்டு கார்மானம் பெற்றுக் கொள்வதற்காக மானிடர்களிடம் வந்து விடும் என அறிவிக்கின்றான்.

6. ஸூர் ஊதியவுடன் பூமிக்கு அசைவுதல் ஏற்பட்டு மலைகள் பஞ்சுகளே போன்று காற்றில் பறக்கும்போது, பூமியின் கண்ணுள்ள சமுத்திரத்தில் தண்ணீர் பொங்கி அலைகள் வீசுவதால் தரையில் வருவதற்கு ஆரம்பித்து மானிடர்களையும் மிருகங்களையும் மூழ்கடித்து விடும் என அறிவிக்கின்றான். இந்த இடத்தில் சில வியாக்கியானக் கர்த்தாக்கள், கடலில் அளவற்ற அலைகள் ஏற்படுவதினால் உஷ்ணம் அதிகரித்து அங்குள்ள தண்ணீர் காற்றாகமாறி பிறகு அந்தக் காற்று நெருப்பாக ஆய் மானிடர்களுக்கு தொந்திரவு கொடுக்க முற்பட்டுவிடுமெனக் கூறுகின்றார்கள். எனவே உலக ஜீவிப்பிற்குப் பிரதானமாக விளங்கிக்கொண்டிருக்கும் தண்ணீர், காற்று, நெருப்பு இவை மூன்றிலும் கெடுதல் ஏற்பட்டவுடன் வானம், நக்ஷத்திரம், மலை, மனிதன், மிருகம், கடல் முதலிய சகலனவும் இல்லாதொழிந்து போய்விடும். எனவே,

முந்திய ஸூர் ஊதுவதற்குப் பின் ஏற்படும்
இவ் ஆறு சம்பவங்களோடு உலகத்தினுடை
யவும் உலகத்தை யுடையவர்களினுடையவும்
முடிவு ஏற்பட்டுப்போய்விடும் என்பது திண்
ணம்.

இந்த இடத்தில் இவ்வாருக ஆறு சம்பவங்
கள் குறிப்பிடப்பட்டிருப்பதில் சில ஆழ்ந்த
பார்வையுடையோர்கள் தற்கம்புரிகின்றனர்.
அதாவது, இச்சம்பவங்கள் முந்திய ஸூர்
ஊதியபின் ஏற்படுவதாயின், நக்ஷத்திரங்கள்
ஒளிவற்றதாக ஆகி, மலைகள் பறந்துகொண்
டிருக்குங்கால் சூல் ஒட்டகமும் காட்டு மிரு
கங்களும் எங்கிருக்கும்? அதுகாலை அவை
கள் வீணில் விடப்பட்டிருக்குமெனவும்,
உயிர்ப்பிராணிகள் ஒன்ருேடொன்று
சேர்ந்து விடுமெனவும் எவ்வாறு கூற
முடியும்? என்பதே. இதற்கு, அல்
லாஹுத ஆலா இச்சம்பவங்களைக் குறிப்
பிடுங்கால் இவைகள் ஒன்றன்பின் ஒன்ருக
நிகழ்பெறுமெனத் தெரிவிக்கவில்லை என்றும்,
அப்பொழுது நிகழக்கூடிய விஷயங்களைக்
குறிப்பிடுவது கொண்டு, அங்கு குறிப்பிட்ட
வாறு ஒன்றன்பின் ஒன்ருக நிகழ்வது அத்
தியா அவசியமென்று கருதுவது அவசிய
மில்லை என்றும், சூரியன் ஒளிவற்றதாக ஆகி
விடுவது சகல விஷயங்களுக்கும் கடைசியில்
நிகழக்கூடியதாக யிருந்தாலும் அஃதொரு
மகத்தான சம்பவமாயிருப்பதால் ஆரம்பத்
தில் குறிப்பிடப் பட்டிருக்கிறதெனவும்,
அதற்குபின் நக்ஷத்திரங்களின் ஒளிமங்கிவிடு
வது பிரதான விஷயமாதலால் அவை குறிப்
பிடப்பட்டிருக்கிறதெனவும், மேலுலகின்
விஷயங்கள் குறிப்பிடப்பட்டபின் பூஉலகி
னில் நிகழக்கூடிய விஷயங்களில் மகத்தான
தும் உறுதியானதும் உயரமானதுமாக
யிருக்கக் கூடியதான மலைக்கு நிகழக்கூடிய
சம்பவத்தைக் குறிப்பிட்டு அதற்குபின் மற்ற
விஷயங்களைக் குறிப்பிடுகிருன் என்று பதில்
கூறி அச்சந்தேகங்களை அகற்றியிருக்கின்
ருர்கள்.

'இவ்வாறு மேலே கூறப்பட்டுள்ள ஆறு
விஷயங்கள் ஏற்படுவது கொண்டு யாவற்றும்
அழிந்து நாசமாய்விட்ட சில காலத்திற்குப்
பின் அல்லாஹுத ஆலா மறுபடியும் ஸூர்
ஊதும்படி ஹஸ்ரத் இஸ்ராபீல் (அலை.) அவர்
களுக்கு கட்டளை 'பிறப்பிப்பான். அதற்குப்
பின் ஒவ்வொரு வஸ்துவும் புதியதோற்றத்
துடன் காணப்படும். இத்தோற்றந்தான்
சதாகாலமும் நிலைத்திருக்கக் கூடியதாகும்.
ஆகவே அதுகாலை நிகழக்கூடிய வேறு ஆறு
சம்பவங்களை இதன்கீழ் குறிப்பிடுகின்ருன்.
அவ் ஆறு நிகழ்ச்சிகளும் மானிடவர்க்கத்தி
னரை நன்மை புரிவதற்கும் சீதேவித்தனத்
தைப் பெற்றுக்கொள்வதற்கும் தூண்டுதல்
செய்கின்றது.

### இரண்டாவது ஸூர் ஊதியவுடன் நிகழக்கூடிய ஆறு விஷயங்கள்.

1\. மானிடர்களை ஒழுங்குசெய்யப்படும்.
அதாவது, மானிடர்களின் ஜடலங்களை ஒழுங்
குபடுத்தியபின் அதில் உயிர் ஊதப்படும்;
அதற்குப்பின் அவ்வுயிரானது திரேகத்தி
னின்று ஒருக்காலும் பிரிந்துவிடமாட்டாது.
பின்னர் ஒவ்வொரு இனங்களையும் பிரித்து,
நல்லோர் கெட்டோர் வெவ்வேருகவும் நல்
லோரில் நல்லவிதமாக வணக்கம் புரிந்தோர்,
ஆண்டவனது பாதையில் தியாகம்புரிந்தோர்
ஆகியவர்களைத் தனித்தனியாக நிறுத்தியும்,
வானம் பூமியுடன் மானிடர்களின் சம்பந்
தத்தை ஏற்படுத்தியும் வைக்கப்படும்.

2\. உயிருடன் புதைக்கப்பட்டுப் போன
சிசுக்கள் எதற்காகக் கொல்லப்பட்டுப்போ
யினவெனக் கேழ்க்கப்படும். அதாவது, அரப்
தேசத்திலுள்ள மூர்க்ககுணம் படைத்த
ஒன்றுமறியா மடையர்கள், ஒருவனுக்குப்
பெண் கொடுப்பது இழிய காரியமென்ருே
அன்றி வறுமைப்பிணியின் காரணமாகவோ
தங்கள் அருமைப் புதல்விகளை உயிருடனிருக்
கும் நிலைமையிலேயே படுகுழியில் புதைக்கிற
வர்களாய் இருந்தார்களாதலின் அம்மடையர்
களை நோக்கி, எதுகாரணத்திற்காக அச்
சிசுக்களை உயிருடன் மண்ணிற்குள் புதைத்து
விட்டீர்களென ஒருகாலத்தில் கேழ்க்கப்படு
மென அல்லாஹுதஆலா அறிவிக்கின்ருன்.
இவ்வாறு ஆண்டவன் வினவிய சிறிது காலத்
திற் கெல்லாம் அத்துர்வழக்கம் அரபிகளின்
பழக்க வழக்கத்திலிருந்து அகற்றப்பட்டுப்
போயிற்று.

3\. மானிடன் உலகின்கண் புரிந்துவந்த
நன்மை தீமைகள் யாவற்றும் எழுதிவைக்
கப்பட்டுள்ள பட்டோலைகள் திறக்கப்பட்டு
அதில் அவன், பூஉலகின்கண் செய்த காரியங்



கள் யாவற்றும் எழுதிவைக்கப்பட்டிருப்ப
தால் நல்லவிதமாக உன்றி நோக்கும்படி
அவனுக்குக் கூறப்படும் என அல்லாஹுத
ஆலா அறிவிக்கின்ருன்.

4\. அறுக்கப்பட்ட உயிர்ப்பிராணிகளின்
தொலிகள் உறிக்கப்படுவதுகொண்டு எவ்
வாறு உள்ளாலிருக்கக்கூடிய மாமிசமும் அங்
கிருக்கும் வஸ்த்துக்களும் வெளியாகின்றன
வோ, அவ்வாறே வானுலகின் திறை எடுபட்
டுப்போய் அங்குள்ளவைகளெல்லாம் தென்
பட முற்பட்டு மலக்குகள் இறங்குவதற்கு
ஆரம்பித்து விடுவார்களெனக் கூறுகின்ருன்.

5\. வானத்தின் திறை எடுபட்டு அங்
குள்ளவைகளெல்லாம் தென்படவே, மானிட
னின் நற்கருமங்கள், தீச்செயல்கள் யாவற்
றும் நன்கு துலாம்பரமாய் விடுமென்றும்,
அதுபொழுது ஆரம்பமாக தீயவர்களுக்கு
நரகத்தைக் காண்பிக்கப்படுமென்றும், மானி
டர்கள் புரிந்துள்ள பாவங்களின் எரிதுருப்
பானது அதில் நல்லவிதமாக சுடர்விட்டு
எரிந்துகொண் டிருக்குமென்றும், அது
நன்மை தீமைகளுக்குக் கூலி கொடுக்கப்படும்
நேரமாகையால், ஆண்டவனது கோபமென்
னும் கங்கியானது அந்த நெருப்பை தணல்
விட்டு எரியும்படி செய்யுமென்றும் அறிவிக்
கிருன்.

6\. சுவர்க்கம் சமீபமாகக் கொண்டுவரப்
பட்டு நியாயம் புரியும் சிம்மாஸனத்திற்குச்
சமீபம் வைக்கப்படுமாகையால், அதிலுள்ள
மட்டிலடங்காக் காருண்யங்கள் யாவருக்கும்
நன்கு புலனுகுமென்றும், அதைப் பார்ப்பது
கொண்டு தீயோர்களுக்கு முன்னைவிட அதிக
வருத்த மேற்பட்டு பெரும் கைசேதமடை
வார்கள் என்றும், அதுகாலை அவர்களுக்கு
யாரும் உதவிபுரியமாட்டார்கள் எனவும்,
எவ்விதமான ஐசுவரியங்களும் பிரயோசனப்
படமாட்டாதென்றும் கூறுகின்ருன்.

மேலே கூறப்பட்டுள்ள விஷயங்கள் யாவ
ருக்கும் எளிதில் புலனுகக் கூடியதாகவும்,
சாதாரண அறிவுடையோர் சற்றும் யோசி
யாதுஒப்புக்கொள்ளக்கூடியதாகவுமில்லாத்த
தால் இதற்கு 'மறைவான விஷயங்களின்மீது
ஈமான் கொள்வது எனக் கூறப்பட்டிருப்ப
தால் இவைகள் நிகழ்பெறுமென்பது நபி
மார்கள் கூறுவது கொண்டுதான் திட்டப்படு
கின்றது. ஆகவே எவன் நபியை ஒப்புக்கொள்
கின்ருனே அவன் இவ்விஷயங்களை ஒப்புக்
கொள்வதில் ஒரு இம்மியும் பிசகு செய்ய
மாட்டான். எனவே, நமது நபிகள் திலகம்
(ஸல்.) அவர்கள் நபியாக இருக்கின்ருர்க
ளென்பதையும், அவர்கள் உண்மையான
வர்களென்பதையும், நபி அவர்கள் மூலம்
வானுலகிலிருந்து எந்த வேதம் வெளியா
யிருக்கின்றதோ இன்னும் அதில் எவ்
விஷயம் குறிப்பிடப்பட் டிருக்கின்றதோ
அவைகள் யாவற்றும் உண்மையான
வைகளென்று திட்டப்படுத்த வேண்டும்.
அரபிகள், பொய்ச் சத்தியஞ் செய்வது
மானிடனின் நாசத்திற்குக் காரணமாகு
மெனக் கருதியிருந்தார்களாதலின், ஆண்ட
வன் கீழே குறிப்பிடப்படுபவைகளை சத்தியத்
துடன் ஆரம்பித்து, குர்ஆன் ஷரீபானது
தன்னுடைய வேதமாக யிருக்கிறதென்பதை
யும், எம்பிரான் நபிகள் திலகம் (ஸல்.) அவர்
கள் நபியாக இருக்குமென்பதையும் நன்கு
உறுதியாகும் விதத்தில் கூறுகின்ருன். அதா
வது, இருளுடைய இரவின்மீதும், பிரகா
சத்தையுடைய பகலின்மீதும் பிரமாணமாக,
பகல் உதயமாவதேபோன்று பிரகாசத்
தைப் பரவச்செய்துகொண்டிருக்கும் குர்
ஆன் ஷரீபை முஹம்மது (ஸல்.) அவர்கள்
தாமே தங்கள் மனஷ்டப்படி இட்டுக் கட்
டிக்கூறவில்லை. ஆனுல் அது ஒரு சங்கையான
தூதர்மூலம் நாயகம் (ஸல்.) அவர்களுக்கு
எத்தியதாகும். அதாவது, ஹஸ்ரத் ஜிப்
ரயீல் (அலை.) அவர்கள் எம்பிரான் நபிகள்
திலகம் (ஸல்.) அவர்களிடம் வஹீ கொண்டு
வந்து ஓதிக் காண்பித்தார்கள். அதனை சத்
தியத்தூதர் (ஸல்.) அவர்கள் அப்படியே நமக்
குத் தெரியப்படுத்தினுர்களென்று நன்கு
விளக்கிக் காண்பிக்கின்ருன் என்பதே.

இதன் 22-வது வாக்கியத்தில் உங்களு
டைய தோழர் பயித்தியகாரராக யிருக்க
வில்லை; அவர்கள் உண்மையாளராக யிருக்கு
மென ஆண்டவன் அறிவித்தவுடன், முஹம்
மத் (ஸல்.) அவர்கள் ஒருக்கால் ஜிப்ரயீல்
(அலை.) அவர்களைப் பார்க்காமலும் அவர்க
ளிடமிருந்து திருவசனங்களைக் கேழ்க்காம
லும் இருக்கக்கூடுமென அரபிகள் சந்தேகங்
கொள்ளலானுர்கள். அல்லாஹுதஆலா இதன்
23-வது வாக்கியத்தின்மூலம், முஹம்மது
(ஸல்.) அவர்கள் தங்கள் கண்ணினுல் ஜிப்ர
யீல் (அலை.) அவர்களைப்பார்த்திருக்கிருர்க

ளென்றும் அவர்களை நல்ல விதமாக அறிந்துகொண்டிருக்கிறார்களென்றும் கூறி அச்சந்தேகத்தை அகற்றியிருக்கிறான்.

குறி சொல்பவர்களும் ஜின்கள்மூலம் மறைவுதலான விஷயங்களை அறிவிக்கக் கூடுமாதலால், ஒருக்கால் நபிகள் நாயகம் (ஸல்.) அவர்களும் குறி சொல்பவர்களாக யிருக்கக்கூடும் என அவ்வராபியர் சந்தேகங்கொள்ளலாயினர். இச்சந்தேகத்தை இதன் 24-வது வாக்கியத்தின்மூலம் அகற்றி, குர்ஆன் ஷரீபானது மறைவுதலான விஷயங்களை அறிவித்துக் கொடுப்பதில் குறைவு செய்வதாக யில்லை என்று அறிவிக்கிறான். எனவே, இதர குறி சொல்பவர்கள் மறுமை நாளில் நிகழக்கூடிய சகல விஷயங்களையும் அறிவிக்க முடியாது; மானிடன் சீதேவித்தனம்பெறுவதன் வழியையோ அல்லது அவன் கெட்டவனாகப்போய்விடுவதின் பாதையையோ அறிவித்துக் கொடுக்க முடியாது; ஆண்டவனுக்குப் பொருத்தமில்லாத செயல் இன்னதெனவும், அவனிடத்தில் விரும்பத்தகாத வார்த்தை இதுவாகுமெனவும் அறிக்கைசெய்யமுடியாது; மானிடர்கள் நோட்டமிட்டுப் பார்த்து உணர்ச்சி பெறுவதற்காக சென்றுபோன உம்மத்துகளின் விஷயங்களையும், முந்திய நபிமார்களின் நிகட்சி சம்பவங்களையும் அறிவிக்கமுடியாது; பிந்தியகாலத்தில் மானிடன் முக்திபெற்றுய்வதற்காக பின்காலத்தில் நிகழக்கூடிய விஷயங்களைப்பற்றி முன்னறிக்கை செய்யவு முடியாது. ஆனால் உலக காரியங்களில், வருங்காலத்தில் நிகழக்கூடிய விஷயங்களில் கஷ்டமில்லாத ஏதாகிலும் சிலவற்றை அறிவிக்கக்கூடும். அதுவும் முழு விபரத்துடன் அறிவிக்கமுடியாது. அவர்கள் கூறுபவைகளில் ஒரு காரியம் உண்மையிலேயே நிகழ்ந்துவிடுமாயின், 100 வார்த்தைகள் பொய்யாய்விடும். அதிலும் அவர்கள் கூறும் வார்த்தைகளுக்குப் பலவிதமான கைகால் வைத்துப் பார்க்க வேண்டும். ஆனால் குர்ஆன் ஷரீபானது இவைகளிலெதையும் மறைத்துவைப்பதாகயில்லை. தவிர குர்ஆன் ஷரீபானது மானிடனது சக்திக்குமேலிட்டதாய் பல விஷயங்களையும் அறிவிக்கக் கூடியதாக யிருப்பதால், ஒருக்கால் குறிசொல்பவர்களின் வார்த்தையாக யிருக்கக்கூடுமென்னும் சந்தேகமேற்பட்டு, அச்சந்தேகமும் அகற்றப்பட்டுப் போகவே, ஒருக்கால் ஷைத்தானுடைய வார்த்தைகளாக இருக்கலாமென்று சந்தேகங்கொண்டனர். அதனால் ‘இந்த குர்ஆன் ஷரீபானது ஷைத்தானுடைய வார்த்தையல்ல’ வென்று இதன் 25-வது வாக்கியத்தில் கூறி அச்சந்தேகத்தையும் அகற்றுகின்றான். ஏனெனில், அல்லாஹ்தஆலாவை ஓர்மைப்படுத்துவது, விக்கிரக ஆராதனையின் கெடுதிகளைக் கூறுவது, நற்கருமங்கள் புரிவதில் ஊக்க முண்டாகும்படி தூண்டுவது, நற்கருமங்கள் புரிவது, சகோதர வாஞ்சை பாராட்டுவது, பொருமையைக் கைக்கொள்ளுவது முதலிய விஷயங்களைக் கற்பித்துக் கொடுப்பது, சற்குணம் நல்லொழுக்கம் இவைகளை அறிவிப்பது, கெட்டவேலைகளின் மீதுவெறுப்புக் கொள்ளும்படி செய்வது முதலிய விஷயங்களைப்பற்றி குர்ஆன் ஷரீபானது தக்க முறையில் அறிவித்துக் கொடுப்பதால் இவ் விஷயங்களுக்கும் ஷைத்தானுக்கும் என்ன சம்பந்தமிருக்கிறது? இவைகளெல்லாம் ஷைதானுடைய கொள்கைக்கு விரோதமானதாகையால் இவைகளைப்பற்றி அவன் ஒருக்காலும் தூண்டவேமாட்டான். ஆகவே இது ஷைத்தானுடைய வார்த்தையாக இருக்கமாட்டாதென்பதையும், பரிசுத்தம் பொருந்திய அல்லாஹ்தஆலாவின் புறத்திலிருந்து ஹஸ்ரத் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் மூலம் எம்பிரான் நபிகள் திலகம் உலகசிரேஷ்டர் (ஸல்) அவர்களுக்கு அறிவித்துக்கொடுக்கப்பட்டதென்பதையும் நன்கு தெரிந்து கொள்கிறோம்.

இந்த குர்ஆன் ஷரீபானது உலக மானிடர்களுக்கு உபதேசஞ் செய்வதாகவும், நேர்வழிகாண்பிப்பதாகவு மிருப்பதால் இதனைப் பின்பற்றி நடக்கவேண்டியது யாவர்மீதும் கடமையாகயிருக்க, ஏ அறிவற்ற ஜனங்களே! நீங்கள் நேரான பாதையை விட்டு எங்கு செல்கின்றீர்கள்? எதற்காக நேரான வழியில் செல்லாதிருக்கின்றீர்கள்? என இதன் 26-வது வாக்கியத்தின் மூலம் அறிவிக்கின்றான். மானிடர்களில் எவன் நேரான பாதையில் செல்ல நாடுபவனாகவும் தன் மனவியாதியைப் போக்கடிக்க பரிகார சிகிச்சை செய்துகொள்ள நாடுபவனாகவு மிருக்கின்றானோ அவனுக்கு இக் குர்ஆன் ஷரீபானது பெரும் உபதேசஞ் செய்வதாகயிருக்கின்றது.

(வல்லாஹு அஃலம்)

## நாயக வாக்கியம்.

மானிடர்காள்! நிச்சயமாக அல்லாஹ்தஆலா தூய்மைவாய்ந்தவனாக யிருப்பதால், தூய்மையான மனதோடு வணக்கம் புரிவதையும், ஒழுங்கான-நேர்மையான முறையில் சம்பாத்தியஞ் செய்வதையுந் தான்விரும்புகின்றான். தவிர நபிமார்களுக்கு எதைச் செய்யும்படி கட்டளை பிறப்பித்திருக்கின்றானோ அதனைச்செய்யும்படியே முஃமினானவர்களுக்கும் கட்டளையிடுகின்றான். எனவே நபிமார்களை நோக்கி துப்பரவான சம்பாத்தியத்தினின்றும் சாப்பிடுங்கள், நற்கருமங்கள் புரியுங்கள், நிச்சயமாக நீங்கள் செய்கிறவைகள் யாவற்றையும் நான் அறிகிறவனாக யிருக்கிறேன் எனவும், ஈமானுடையவர்களே! நான் உங்களுக்கு அளித்திருக்கும் துப்பரவான வஸ்துக்களையும், ஹலாலான சாமான்களையும் சாப்பிடுங்கள் எனவும் கூறுகின்றான். இந்நிலைமையில் கிடைத்த வஸ்துக்களை எல்லாம் சாப்பிட்டுவிட்டு தனது இருகரங்களையும் உயர்த்தி ‘எனது நாயனே’ என்று கூறிக்கொண்டு ஹராமான முதல்களைச் சாப்பிட்டுக் கொண்டிருப்பவனின் பிரார்த்தனை எந்தவிதத்தில் ஒப்புக்கொள்ளப்படப் போகிறது? என எம்பெருமானார் நபிய்யகரீம் (ஸல்) அவர்கள் நவின்றதாக ஹஸ்ரத் அபூஹுரைரா (ரலி) அவர்களைத் தொட்டும் ரிவாயத்துச் செய்யப்பட்டிருக்கிறது.

சோதரீர்! எந்த சொத்தில் இதரர்களின் வழக்கோ அன்றி சச்சரவோ இல்லாதிருப்பதுடன் அது சன்மார்க்கத்திற்கு ஒவ்வாத முறையில் சம்பாதிக்கப்படாததாகவுமிருக்கின்றதோ அவைதான் ஆண்டவனுக்குப் பொருத்தமான முதலென்றுதெரிந்துகொள்கிறோம். ஆகவே, ஹராமான—சன்மார்க்கத்திற்கு விரோதமான வழியில் சம்பாத்தியஞ் செய்யப்பட்ட சொத்திலிருந்து தானதருமஞ் செய்வது பயனற்றதாகுமென்பதையும், அதனை அல்லாஹ்தஆலா ஒருக்காலும் அங்கீகரிக்கமாட்டான் என்பதையும் நன்கு தெரிந்துகொள்கிறோம். ஏனெனில் அல்லாஹ்தஆலா தூய்மை வாய்ந்தவனாகயிருப்பதால் அசுத்தமான—மார்க்க விரோதமான விஷயங்களில் சம்பாத்தியஞ் செய்யப்பட்ட ஐசுவரியங்கள் தன் பாதையில் செலவு செய்யப்படுவதை எவ்வாறு பொருத்திக் கொள்வான்? ஒருக்காலும் அங்கீகரித்துக் கொள்ளமாட்டான் என்பது திண்ணம். மேலே கூறப்பட்டுள்ள நாயக வாக்கியத்தில், நபிமார்களுக்கும் இதர முஸ்லிம்களுக்கும் ஒரேவிதமான கட்டளை பிறப்பிக்கப்பட்டிருப்பதால் நாம் நபிமார்களைப்போல் பரிசுத்தமான விதத்தில் ஐசுவரியங்களை எவ்வாறு தேடமுடியுமென சிலர் கூறிக்கொண்டிருப்பது மறுக்கப்பட்டுப் போய்விடுகிறதென்பதை நன்கு தெரிந்துகொள்கிறோம்.

மேலே கூறப்பட்டுள்ள நாயக வாக்கியத்தால், முஸ்லிம்கள் புரியக்கூடிய சகல வணக்கங்களைப் பார்க்கினும் சன்மார்க்கத்திற்கு நேர்மையான முறையில் மானிடன் தனது ஜீவியத்தை நடத்திக்கொள்வதுதான் முதன்மையானதாகு மென்பதையும், இதுவன்றி வணக்கம் புரிவதில் யாதொரு இன்பமுமில்லை என்பதையும், அவனது பிரார்த்தனைகள் ஒப்புக்கொள்ளப்பட்டுப் போகிறதென்று ஆதரவு வைப்பதில் யாதொரு பிரயோசனமுமில்லை என்பதையும் நன்கு தெரிந்துகொள்கிறோம்.

ஹலாலாக—சன்மார்க்கத்திற்கு ஏற்றவிதமாக எவ்வாறு ஐசுவரியங்களைத் தேடமுடியுமெனவும், அதனை தேடிக்கொண்டிருப்பது மிக பயனற்ற காரியமெனவும் சில அறியாத மக்கள் கூறுகின்றார்கள். அவர்களின் இக்கூற்று பயனற்றதேயாகும். எனவே கஷ்டப்பட்டுக் கூலிவேலை செய்தல், வெள்ளாமை புரிதல், சன்மார்க்கம் கட்டளையிட்டிருப்பதற்கிணங்க வியாபாரம் செய்வது முதலியவைகளிலீடுபடுவது கொண்டு கிடைக்கும் ஐசுவரியங்களானது ஹலாலான—நேர்மையான முறையில் சம்பாத்தியஞ் செய்யப்படுபவைகளாகும். ஆகவே எவன் மறுமை நாளில் ஆண்டவன் சமுகத்தில் நிற்கவேண்டுமென்பதை பயப்படுகின்றானோ அவனிடம் ஹலாலான—சன்மார்க்கத்திற்கு நேர்மையான முறையில் சம்பாத்தியஞ்செய்வது முதன்மையானதாகும். ஆனால் ஹராமான—சன்மார்க்கத்திற்கு விரோதமான வகையில் சம்பாத்தியஞ் செய்பவர்களைப்பற்றி இங்கு குறிப்பிட வேண்டிய அவசியமில்லை.






## உத்தமத் தூதர் (ஸல்) அவர்களைப் பின்பற்றல்.

*அன்புற்ற முஸ்லிம் நேயர்காள் !*

**நீ**ங்கள் இம்மை மறுமை ஆகிய இவ் விருபதிகளின் நன்மைகளை நாடுபவர்களாகவும், ஆண்டவனுல் ஒப்புக் கோள்ளப் பட்டவர்களாக ஆய்விட விருப்பங் கோள்பவர்களாகவும், மறுமை நாளில் அதன் அமளியைவிட்டு அச்சந் தீர்ந்து விடக் கருதுபவர்களாகவும் உயிர்வாழ நாடுவீர்களாயின், உடனே முன் வாருங்கள். நாமெல்லோரும் சேர்ந்து முஹம்மத் அரபி (ஸல்.) அவர்களது கட்டளைக்கு வழிப்பட்டு நடப்பதை நமது பிரதான கடமையாகச் செய்து கோள்வோம். இப் பூஉலகின் கண் மற்ற மார்க்கங்களின் வாயல்களெல்லாம் அடை பட்டுப் போய், முஹம்மது (ஸல்.) அவர்கள் மூலமாக நம்மனோர்க்கு சன்மானமாக அளிக்கப்பட்டுள்ள சன்மார்க்கத்தின் வாயில் ஒன்றுமட்டுந் தான் திறக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, ஆண்டவன் மீது பிரமாணமாக எம் மனிதனும் எம்பிரான் நபிகள் திலகம் (ஸல்) அவர்களைப் பின்பற்றி நடக்காது, தான் விரும்பும் எந்த நாட்டத்தையும் பெற்றுக் கோள்ள முடியாதேன்பது திண்ணம். நாம் குர் ஆன் ஷரீப் முழுதையும் பாராயணஞ் செய்த போதிலும், அதிலிருந்து "மானிடர்கள் ! அல்லாஹ்வுக்கும் அவனது ரசூலுக்கும் வழிப்பட்டு நடப்பதைக் கடமை யாக்கிக் கோள்ளுங்கள்" என்று அது கூறுவதைத்தான் தேரிந்து கோள்கிறோம். தவிர வழிகேடேன்னும் கிடங்கில் ஆழ்ந்து கிடந்த அனுகரீகக் கூட்டத்தார்களாகிய அரபியர்கள் எதனுல் மானிடர்களின் சிரேஷ்டர்களாக விளங்கினுர்களென்பது உங்களுக்குத் தேரியாதா? உலகிலுள்ள சகல மானிடர்களிலும் அனுகரீகத் தன்மை வாய்ந்தவர்களேனக் கருதப்பட்டு காட்டு மிராண்டிகளே போல் உயிர் வாழ்ந்து வந்த அந்த அரபியர்கள், எம்பெருமானுர் நபிகள் திலகம் (ஸல்.) அவர்களைப் பின்பற்றி நடந்ததன் காரணமாக ஒரு நொடிப்போழுதில் உலகம் போற்றும் உத்தமர்களாகவும், சகல மானிடர்களுக்கும் வழிகாட்டியாகவும் திகழ்ந்தார்களேன்னும் விஷயம் இது காலையும் நம் கண்முன் துலங்கிக் கோண்டிருக்கிறது. இதுவன்றி, இது காலை இவ்வுலகினில் மானிடர்களுக்குப் பெரும் சங்கை மரியாதைகளெல்லாம் யாரைப் பின்பற்றி நடந்து வருவதால் கிடைக்கின்றது? நம்மிற் சிலர் குத்புகளாகவும் வலிகளாகவும், மகான்களாகவும் திகழ்வது எதனுல்? யாரைப் பின்பற்றி நடந்ததால் அப்பாக்கியத்தை அடைந்தார்கள்? தவிர மானிடன் ஆண்டவனுல் உகக்கப்பட்டவனுக ஆய்விட நாடுவானுகில், யாருடைய கட்டளையை நிறைவேற்றுவதால் அவன் அப்பதவியை அடைகின்றுன்? இவைகளேல்லாம், உலக தயாளர் உத்தமத்தூதர் (ஸல்.) அவர்கள்தான் உண்மையான வழி காட்டி எனக் கருதி அவர்களைப் பின்பற்றி நடந்து வந்ததாலேற்பட்ட நற்பயன்களேயாகுமேன்பது திண்ணம். உண்மையிலேயே யாதோரு வகுப்பார் ஜீவித்திருக்கவோ, அன்றி உயர்பதவி என்னும் ஏணியில்ஏறித்தங்களை அழகுப் படுத்திக் கோள்ளவோ நாடுவோர்களாயின், அன்னோர் நமது உலக ரெட்சகர் (ஸல்.) அவர்களது அடிச்சுவட்டினைப் பின்பற்றி நடக்காது அவ்வுயர் பதவியை அடைந்துவிட முடியாதேன்பது திண்ணம். ஆகவே நாமும் ஒவ்வோரு விஷயங்களிலும் மகான் அவர்களின் செயல்களை முன் மாதிரியாகக் கோண்டு நடக்க முற்பட்டு இகபர மிரு உலகின் பாக்கியங்களைப் பெற்று சீதேவித்தனத்தை யுடையவர்களாகத் திகழ்வோமாக.

## மாதர் கவனிப்பு

**எம்பெருமானுர் உலக தயாளர் (ஸல்.) அவர்களது அருமைப் புதல்வியார் ஹஸ்ரத் பாத்திமா (ரலி.) அவர்களின் வாழ்க்கை.**

*தயாள சிந்தையே பிரதானமாகக் கொண்டுள்ள ஹஸ்ரத் அபூபக்ர் ஸித்தீக் (ரலி.) அவர்கள் தங்களிடமிருந்த ஐசுவரியங்களில் பஹிரங்கமாக 40 ஆயிரம் திர்ஹங்களையும், அந்தரங்கமாக 40 ஆயிரம் திர்ஹங்களையும் அல்லாஹ்வின் பாதையில் செலவுசெய்துவிட்டுக் கடைசியில் தங்கள் மர்மஸ்தானத்தை மறைத்துக்கொண்டு வெளியில் வருவதற்குங் கூட போதிய அளவு அவர்களிடம் யாதொன்று மில்லாத நிலைமையில் மூன்று நாட்கள் வரை வெளியில் புறப்படாமலும் எம்பெருமானுர் நபிகள் திலகம் (ஸல்.) அவர்களைச் சந்திக்காமலு மிருந்தார்களென்னும் விஷயம் நம்மனோரின் மனதைப் புண்படுத்தும் சஞ்சலச் செய்தியாக யிருக்கின்றது. அதன்பின் இதனை அறிந்த சற்குணசீலர் (ஸல்.) அவர்கள், தங்கள் நம்பிராட்டிமார்களின் இல்லங்களுக்கேகி அங்கு தேடிப்பார்த்தும் அவர்களின் தேள்வைக்கு அதிகமாக யாதொரு உடுப்பையும் பெற்றுக்கொண்டார்களில்லை. கடைசியில் உலக தயாளர் (ஸல்.) அவர்கள் கவலை மேலிட்டவர்களாய் ஹஸ்ரத் பாத்திமா (ரலி.) அவர்களிடஞ் சென்று, அபூபக்ர் ஸித்தீக் (ரலி.) அவர்களுக்கு அணியக் கொடுப்பதற்காக யாதொன்றும் அகப்படவில்லை என மனவருத்தத்தோடு கூறினுர்கள். ஹஸ்ரத் பாத்திமா (ரலி.) அவர்களிடமும் தேள்வைக்கதிகமாக யாதொரு துணியுமில்லாததால், அவர்களும் அது விஷயமாக அளவற்ற வருத்தமடைந்தார்கள்.*

*ஹஸ்ரத் பாத்திமா (ரலி.) அவர்களுக்கு விவாகமாகுங்காலை, எம்பெருமானுர் நபிய்ய கரீம் (ஸல்.) அவர்கள் ஹஸ்ரத் அபூபக்ர் (ரலி.), ஹஸ்ரத் உமர் (ரலி.), ஹஸ்ரத் உதுமான் (ரலி.), ஹஸ்ரத் உஸாமா (ரலி.) இந்நால்வர்களையும் அழைத்து சீதனம் கொண்டுபோகும்படி கூறவே, அம்மகான்கள் ஒருதிருகை, ஒரு தோலி, ஒரு மண் கூஜா, மண்ணுல் செய்யப்பட்ட சிறிய பாத்திரமொன்று ஆகிய இவைகளை சீதனமாகக் கொண்டுபோய்க் கொடுத்தார்கள். அதுகாலை ஹஸ்ரத் அபூபக்ர் ஸித்தீக் (ரலி.) அவர்கள், எம்பெருமானுர் உத்தமகுண சீலர் (ஸல்.) அவர்களை நோக்கி, இதுதானு ஹஸ்ரத் பாத்திமா (ரலி.) அவர்களுக்குக் கொடுக்கக்கூடிய சீதனம்? என்று வினவினுர்கள். உடனே ஹஸ்ரத் அவர்கள், உலகத்தின் அற்பவாழ்க்கையைக் களிப்பதற்கு இதுவே போதுமானதாகும் என பதில் கூறினுர்கள். தவிர ஹஸ்ரத் பாத்திமா (ரலி.) அவர்கள் கல்யாணப்பெண் கோலத்தில் செல்லுங்கால் அணிந்திருந்த துப்பட்டியில் 12 ஒட்டுகள் போடப்பட்டிருந்தது. அதன்பின் ஹஸ்ரத் பாத்திமா (ரலி) அவர்கள் தங்களது திருகரங்களினுல் கோதுமை அறைத்தவர்களாகவும் நாவினுல் திருக்குர்ஆன் ஷரீபைப் பாராயணஞ் செய்துகொண்டு மனதில் அதன் கருத்துக்களைச் சிந்தித்தவர்களாகவும், கால்களினுல் தொட்டியை ஆட்டிக்கொண்டவர்களாகவும் ஆண்டவனது பயத்தின் மேலீட்டால் கண்களிலிருந்து தண்ணீர் வடித்தவர்களாகவு மிருந்தார்கள்.*

*அன்புற்ற நேயர்காள்! இதுகாலை யுள்ள நமது பெண்மணிகள் என்ன செய்துகொண்டிருக்கிறுர்களென்பதையும், அவர்கள் சுவனபதி அடையவேண்டுமென்பதற்காக ஏதாகிலும் நல்ல அமல்கள் புரிந்து வருகின்றுர்களாவென்பதையும் உற்றுணர்ந்து பாருங்கள்? பாக்கியசாலிகளான - ஜெயசீலர்களான அம்மாதுக்களுக்கும் இவர்களுக்கும் எவ்வளவு தூரம் வித்தியாசமிருக்கிறதென்பதை கவனத்திற்குக் கொண்டுவந்து பாருங்கள்.*

*ஹஸ்ரத் பாத்திமா (ரலி.) அவர்களிடத்திலும் யாதொன்றும் கிடைக்காததால் எம்பெருமானுர் நபிகள் திலகம் (ஸல்.) அவர்கள் மனவருத்தம் அதிகரித்தவர்களாய் வெளியில் புறப்படவே, ஹஸ்ரத் பாத்திமா*

(ரலி.) அவர்கள் தங்களிடமுள்ளதில் ஏதா
கிலுமொரு வஸ்த்துவை ஹஸ்ரத் அபூபக்ர்
ஸித்தீக் (ரலி.) அவர்களுக்கு அனுப்ப
வேண்டுமெனக் கருதினார்கள். அதுகாலை
அவர்களிடம் கைப்ரில் கிடைத்த ஒரு தலை
யணி, ஒரு சட்டை இவ் விரண்டைத் தவிர
வேறு யாதொன்று மிருக்கவில்லை. எனவே
இவ்விரண்டையும் ஹஸ்ரத் அபூபக்ர் ஸித்தீக்
(ரலி.) அவர்கள் சமுகம் அனுப்பிவைத்து,
தாங்கள் என் தந்தை அவர்களுக்குச் செய்
திருக்கும் உபகாரம் எனக்கும் தெரிந்ததே
யாகும்; இது சமயம் என்னிடம் இவ்விரண்
டையுந் தவிர வேறு யாதொன்றுங் கிடை
யாது என்னும் சமாசாரத்தையும் தெரியப்
படுத்தியிருந்தார்கள். ஹஸ்ரத் அபூபக்ர் ஸித்
தீக் (ரலி.) அவர்கள் மூன்று தினங்களாக
எம்பெருமானார் சமத்துவத் தூதர் (ஸல்.)
அவர்களைப் பார்க்காது மனஸஞ்சலமடைந்
திருந்தார்களாதலின், உடனே அச் சட்டை
யைக் கையில் வாங்கியவுடன் மேலே அணி
ந்துகொண்டு, நடக்குங்கால் அது திறந்து
கொள்ளாதவாறு பேரீத்த முற்களால் பொ
ருந்திச் சேர்த்துகொண்டு சத்தியத் தூதர்
(ஸல்.) அவர்களது திருச்சமுகம் வந்து சேர்ந்
தார்கள். அதுகாலை ஹஸ்ரத் ஜிப்ரயீல் (அலை.)
அவர்களும் அதே உடுப்பு அணிந்தவர்களாக
அங்கு வந்தார்கள். உடனே எம்பிரான்
ரசூல் (ஸல்.) அவர்கள், ஹஸ்ரத் ஜிப்ரயீலை
(அலை) நோக்கி, இன்றையதினத்தைத் தவிர
வேறு எப்பொழுதும் தாங்கள் இவ்வாறு
உடுப்பு அணிந்து வந்ததை யான் பார்த்த
தில்லை எனக் கூறினார்கள். அதற்கு ஹஸ்ரத்
ஜிப்ரயீல் (அலை) அவர்கள், இதுபொழுது
நான்மட்டும் இவ்வுடுப்பு அணிந்திருப்பதா
கக் கருதவேண்டாம்; வானுலகிலிருக்கக்
கூடிய மலக்குகள் யாவரும் ஹஸ்ரத் அபூபக்ர்
ஸித்தீக் (ரலி.) அவர்கள்மீது பிரீதிகொண்டு
இவ்வாறான உடுப்பையே அணிந்திருக்கிறார்க
ளெனக் கூறிவிட்டு, அபூபக்ர் (ரலி.) அவர்
கள் அல்லாஹ்த ஆலாவின் கற்பனையைப்
பொருத்திக்கொண்டிருப்பதால், அல்லாஹ்த
ஆலாவும் அவர்கள்மீது பிரீதிகொண்டவனாக
யிருக்கின்றான் என்பதை அவர்களுக்கு
அறிவிக்கும்படி தங்களுக்குத் தெரிவித்திருக்
கின்றான் எனக் கூறினார்கள். இச் சுபச்செய்
தியை எம்பெருமானார் (ஸல்.) அவர்கள்,
ஹஸ்ரத் அபூபக்ர் ஸித்தீக் (ரலி.) அவர்க
ளுக்கு அறிவிக்கவே, அவர்கள் கண்ணீர்விட்
டவர்களாக, ஆண்டவா! நீ என்னிடம்
பொருத்தமுடையவனாக இருக்கின்றாய்; நான்
உன்னுடைய கற்பனையைப் பொருந்திக்
கொண்டவனாக யிருக்கிறேன், என்று மூன்று
முறை கூறினார்.

விவாகக் காரியங்களில் வீணாகப் பணத்தை
வாரி இறைப்பதற்குக் காரணஸ்தர்களாக
யிருக்கும் மாதுக்கள், ஹஸ்ரத் பாத்திமா
(ரலி) அவர்களது விவாகம் எவ்வாறு நடை
பெற்றதென்பதை நன்கு சிந்தித்துப் பார்த்
துத் தங்கள் ஐசுவரியங்களை வீணில் செல
விடாதிருப்பார்களாக. தவிர, நாம் செய்ய
வேண்டிய ஒவ்வொரு காரியங்களுக்கும் எம்
பெருமானார் நபிகள் திலகம் (ஸல்.) அவர்க
ளின் செயல்கள் முன்மாதிரியாகத் திகழ்ந்து
கொண்டிருக்கிறதாதலின், நாமும் ஒவ்வொரு
காரியங்களையும், அவர்கள் எந்த முறையில்
நடத்திச் சென்றார்களோ அதனைப் பின்பற்
றியே நடத்திச் செல்லவேண்டுவது அத்தியா
அவசிய மாகும். அவர்களின் திவ்விய
முறைக்கு நமது செயல்கள் முரண்படுமாகில்,
இம்மை மறுமையில் நமது காரியங்கள் முழு
தும் கெட்டுப் போய்விடும். ஆகவே, எவர்
கள் சன்மார்க்கத் திற்கு விரோதமாகக் காரி
யாதிகள் புரிந்து வருகின்றார்களோ அன்
னோர் இருபதிகளின் நஷ்டங்களை விளைவித்
துக் கொண்டவர்களாகும். எனவே முஸ்லிம்
நேயர்காள்! சற்று சிந்தனை புரிந்து தங்கள்
ஐசுவரியங்களை வீணில் செலவு செய்யாது
எம்பெருமானார் (ஸல்.) அவர்களது முன்
மாதிரியைப் பின்பற்றி யொழுகி கார்யாதி
களை நடத்திச் செல்ல முயற்சிப்பீர்களாக.

## முஸ்லிம் நேயர்காள்!

இது காலை நஞ்சோதிரர்கள், தங்களை மிடுமைத்தனம் தாழ்மை அடிமைத்தனம்
முதலிய வியாதிகள் பீடித்தாட்டுவதாய் முறைப்பாடு செய்துகொண்டிருக்கிறார்கள். எனவே
அன்னோர், இவைகளெல்லாம் எதனாலேற்பட்டதென்பதை நன்கு சிந்தித்துப் பார்ப்பார்
களாக.

# ஐரோப்பாவுக்கு முஸ்லிம்கள் புரிந்த பேரானுகூலங்கள்

(அமெரிக்க சர்வகலாசாலையில் எகிப்து வாசியாகிய ஓர் அராபிய மேதாவி
செய்த சரித்திர சம்பந்தமான பிரசங்கம்)

அமெரிக்காவிலுள்ள ஸலஸ்னட்டி சர்வ
கலாசாலையின் புரொப்ஸராகிய மிஸ்
டர் ஹார்டன் என்பார், தமது மாணவர்களை
முன்னோக்கி, "கீழ்நாட்டாரின் விஷயங்கள்"
என்னும் கருத்துடைய விசித்திரமானதும்,
விபரீதமானதுமான பிரசங்கமொன்று புரிந்
தார். அதில் அவர், நம்கீழ்நாட்டாரின் தன்
மைகளைப்பற்றி முதலில் சிறிது பரிசீலனை
செய்து அதன் பிடிகைகளைக் கூறிவிட்டு,
பிறகு மேனாட்டார்களின் மேன்மைகளைப்பற்
றியும், ஐரோப்பியர்களின் அரசியல் திறமை
யின் முறைமைகளைப்பற்றியும் மிகமிக சிலாக்
கியமாகப் பிரஸ்தாபித்துக் கூறினார். அங்ங
னம் அவர் பாடபோதகப் பிரசங்கம் நிகழ்த்
தியதற்கிடையில், கீழ்நாட்டு முஸ்லிம்கள்
மீது மாணவர்கட்கு வெறுப்பு ஏற்படுந்தோர
ணையில், முஸ்லிம்களின் இழிவுகளையும்
ஐரோப்பியர்களின் புகழ்களையும் எடுத்து
விளக்கினார். அத்துடன் இவ்வுலகத்துக்கெல்
லாம் பேரானுகூலங்கள் புரிந்து உலகத்
தோரை முன்னேற்றமடையச் செய்தது
ஐரோப்பியர்தானென்றும், ஐரோப்பியர்களு
டைய உபகாரங்களையும், நாகரிகங்களையும்
விவேகமுள்ள எந்த மனிதரும் மறுத்துக்
கூறவேமாட்டாரென்றும் எடுத்துக் கூறினார்.

மேலும் அவர், அப்பிரசங்கத்தினிடையே
இஸ்லாத்தைப்பற்றியும், பண்டைய முஸ்லிம்
களின் வரலாறுகளைப்பற்றியும், அக்காலமுஸ்
லிம்களின் நிலைமைகளைப்பற்றியும், எடுத்துக்
கூறியபோது, 'முஸ்லிம்களுடைய வழக்கா
சாரங்கள், இஸ்லாமிய ஜிஹாதுகள், பண்
டைக்காலத்தவர்கள் அடிமைகளை வைத்
திருந்தவழக்கங்கள் முதலியவைகளையொட்டி
மிகமிக இழிவான முறையில் எடுத்துக் கூறி
அதன்மீது பலவாறான ஆக்ஷேபனைகளையுங்
கிளப்பினார். அவர் இஸ்லாத்தைப்பற்றி இங்
ஙனம் மிக்க இழிவாகக் கூறிவிட்டு அதற்கு
நேர் எதிரிடையாய் கிறிஸ்துவ சமூகத்தின்
மேன்மைகளையும் சிறப்புக்களையும் உதாரத்
தன்மைகளையும் அளவுக்கதிகமாகவே எடுத்
தோதினார். அங்ஙனம் பிரஸ்தாபித்தபோது
அவர் மிக உற்சாகமாய் மொழிந்த சில
வார்த்தைகளாவன:—

"ஏ அன்பர்காள்! நோட்டமிட்டுப்பாருங்
கள்! இக்காலை நம் கிறிஸ்துவ சமுதாயத்தி
னர்தான் மிகமிக சிறந்துவாழ்ந்து வருகின்
றனர்; நம்மவர்கள்தான் உலகத்தவர்கட்கு
நன்னாகரிகத்தையும், விஞ்ஞானத்தை (சயின்
ஸை)யும் கற்பித்துக் கொடுத்தார்கள்; கீழ்
நாட்டு ஜனங்கள் மனிதர்களை அடிமைக
ளாக்கி வைத்திருந்த பழைய கெட்ட வழக்
கத்தை நம்மவர்கள் தான் ஒழித்துப்போக்கி
னார்கள்; மேலும் அடிமை வழக்கம் இனி எப்
போதுமே தலை எடுக்காவண்ணம் கெல்லி
எறிந்ததும் ஐரோப்பியர்தான்" என்பன
வாம்.

கல்வி சம்பந்தமாயும், சரித்திர பூர்வமா
யும் மிஸ்டர் ஹார்டன் கூறும் மேற்படி பிர
சங்கத்தைக் கேட்பதற்காக பற்பல கல்வித்
துறையின் பலதிறப்பட்ட ஆசிரியர்களும்
சமுகம் கொடுத்திருந்ததுடன் அச்சர்வகலா
சாலையில் கல்விபயின்று கொண்டிருக்கும்
எகிப்தின் மாணவர்களும் விஜயஞ் செய்திருந்
தனர். குரோதத்தன்மையுடன் மேற்படி
புரோப்ஸர் கூறிய விஷயங்கள் முஸ்லிம், மாண
வர்களின் மனங்களையும் இஸ்லாமிய உணர்ச்
சிகளையும் பெரிதும் உருத்தியது. எனவே
அம்மாணவர்கள் யாவரும் ஒன்று சேர்ந்து
எகிப்து வாசியும் பிரபல அல்லாமாவு
மாகிய ஒரு மகானிடம் சென்று அந்தப் பிர
சங்கத்தின் விஷயங்களையும் போக்கையும்
எடுத்துக் கூறி, அதற்கு மறுப்பாக அதே
சர்வகலாசாலையில் தாங்களும் ஒரு பிரசங்கம்
புரிய வேண்டுமென்றும், அதில் இஸ்லாத்
தின் உண்மைகளையும், முஸ்லிம்கள் ஐரோப்
பாவுக்குச் செய்த அனுகூலங்களையும் எடுத்

துரைக்க வேண்டுமென்றும் வேண்டிக்கொண்டார்களாதலின், அவ்வேண்டுகோளை அல்லாமா அவர்கள் மனமுவப்போடு ஏற்றுக்கொண்டார்கள்.

அந்த சர்வகலாசாலையின் பிரசங்க ஹாலிலேயே அல்லாமா அவர்களின் பிரசங்கத்துக்கும் ஏற்பாடு செய்யப்பட்டது. இதற்கும் அநேக அறிவாளிகளும் ஆசிரியர்களும் மாணவர்களும் விஜயஞ் செய்திருந்தனர். அத்துடன் புரோப்ஸர் மிஸ்டர் ஹார்டனும் விஜயஞ்செய்திருந்தது குறிப்பிடத் தக்கதாகும். அதுபொழுது அல்லாமா அவர்கள் தெளிந்த ஆங்கிலப் பாஷையில் உருக்கமாய்ப் பிரசங்கம் செய்ய ஆரம்பித்து, விஷயங்களை உள்ளாளுள்ளபடி எடுத்துரைத்து மிஸ்டர் ஹார்டனின் கூற்றுகள் தவறானதென்பதை தக்க ஆதாரங்களுடன் எடுத்து விளக்கவே, எல்லா ஆசிரியர்களும் மாணக்கர்களும் அல்லாமா அவர்களது பிரசங்கத்தில் ததும்பிக் கிடந்த உண்மைகளை அப்படியே ஒப்புக்கொண்டார்கள். புரோப்ஸர் மிஸ்டர் ஹார்டனுங்கூட தமது தவறுதலைப்பற்றிக் கூறி சிரஞ்சாய்க்க வேண்டியதாயிற்று. அத்தகைய பிரசங்கத்தில் அல்லாமா யூஸுப் அவர்கள் எடுத்துக்கூறிய சில முக்கிய விஷயங்களின் சாராம்சத்தை மட்டும் இதன்கீழ் சுருக்கமாய் எடுத்துக் கூறுவாம்.

## பிரசங்க சாரம்

“ சகோதரர்காள் !

கிறிஸ்துவ நண்பர்கள் எப்போதும் ஒரு வஸ்துவின் ஒரேபக்கத்தை மட்டும் நோட்டமிடுபவர்களா யிருக்கின்றனர்; அங்ஙனம் நோட்டமிடுங்கால் வெளிரங்கத்தை மட்டும் நோட்டமிட்டுவிட்டு மறுபக்கத்தை நோட்டமிடாமலே உதாசீனஞ் செய்பவர்களாயிருக்கின்றனர். நேற்றுப் பிரசங்கம் புரிந்த புரோப்ஸர் மிஸ்டர் ஹார்டனும் அப்படிப்பட்டவர்களில் ஒருவராகவே யிருக்கின்றார்; அவர் தம் பிரசங்கத்தில், மேனாட்டார்கள் கீழ்நாட்டாருக்குச் செய்த அனுகூலங்களை மட்டும் எடுத்துக் கூறினார். ஆனல் நியாயத்தை அவர் கடைப்பிடித் திருந்திருப்பாரானல், மேனாட்டாருக்கு கீழ்நாட்டார் செய்த பேரானுகூலங்களையும் மறைக்காமல் எடுத்தோதியிருக்கலாம். அப்போதுதான் அவர் பாரபக்ஷமின்றி ஒரு விஷயத்தின் இருபக்கங்களையும் நோட்டமிட்டு ஆராய்ச்சி செய்தவராகவும் எவ்விதக் குறைகூறலுக்கும் ஆளாகாதவராகவுமிருப்பார். யான் இதுசமயம் கூறும் ஒவ்வொன்றுக்கும் சரியான ஆதாரமிருக்கின்றது; பூர்வகால முஸ்லிம்கள் எல்லாவித கல்விகளிலும் வித்தைகளிலும் தேர்ந்த மேதாவிகளாகவும் விற்பன்னர்களாகவு மிருந்தனர்; ஐரோப்பியக் கிறிஸ்தவர்கள் அம்முஸ்லிம்களின் காலடியில் மண்டியிட்டுப் பணிந்து கல்விகளையும் வித்தைகளையும் கிரகித்துக்கொண்டார்கள். அங்ஙனம் அவர்கள் அன்று மண்டியிட்டுக் கல்வி வித்தைகள் கற்றில்லாது போயிருப்பார்களாயின், இன்று மிஸ்டர் ஹார்டன், ‘கீழ்நாட்டாருக்கு மேனாட்டார் புரிந்த உபகாரங்கள்’ என்ற விஷயத்தைக் கூட அறிந்திருக்கமாட்டார். மேலும், அக்காலை இஸ்பெயின் தேசத்திலுள்ள இஸ்லாமிய யூனிவர்ஸிட்டிகளில் ஐரோப்பிய கிறிஸ்துவ மாணவர்கள் பிரவேசித்து கலை பயின்று தேர்ச்சிபெறாது போயிருப்பின், இன்று ஐரோப்பா தேசம் இத்துணைக் கீர்த்தியும் பிரக்கியாதியும் பெற்றிருக்கவே மாட்டாது. மேலும் முற்காலத்திய ஐரோப்பியக் கிறிஸ்துவர்கள் தங்கள் பெண்மணிகளை முஸ்லிம்களுக்கு மணமுடித்துக் கொடுத்துள்ளார்களென்பதை நியாயமும் உள்ளதை ஒளிக்காத சுபாவமும், சிறிதே உண்மையான சரித்திர ஞானமுமுள்ள எந்தக் கிறிஸ்துவ அறிஞனும் மறுத்துக் கூறுதல் முடியுமோ? இங்ஙனம் யான் கூறுவது தவறாயிருக்கக் கூடுமென்று எவரேனும் சந்தேகிப்பிர்களாயின், உடனே வாசகசாலைகட்குச் சென்று சரியான சரித்திரப் புஸ்தகங்களை எடுத்துப் புரட்டிப் பார்த்துத் தெரிந்து கொள்ளுங்கள். ஆகவே முஸ்லிம்கள்தான், மேனாட்டார்களுக்கு ஆதிபூர்வமான ஞான வித்யா போதகர்களாகவும் சீர்திருத்தக்காரர்களாகவு மிருந்துள்ளார்கள். சரித்திர உண்மை வரலாறுகள் இங்ஙனமிருக்க, அறிவிலும் கல்வி யாராய்ச்சியிலும் அதிகப் பரிச்சியமுள்ள ஒரு புரோப்ஸர் இங்ஙனம் குரோதமும் துரோகமுமான சிந்தை பூண்டு முஸ்லிம்கள்மீது பாதகமாய் உண்மைக்கு மாற்றமாய் பொய்கூறுவது ஒருபோதும் நியாயமாகமாட்டாது. குரோதமும் விரோதமும்பூண்ட இதர பாதிரிக் கோஷ்டியினரைப் போல் இவரும் முஸ்லிம்கள் மீது ஆத்திரங்கொண்டு உண்மையை மறைத்துக் கூறுவதாயின், அவர்கட்கும் இவருக்கும் என்ன வித்தியாசம் இருக்கப்போகின்றது? இவ்வாறெல்லாம் கூறி இஸ்லாத்தின் சத்தியம் என்னும் சூரியன்மீது மண்ணையள்ளிப் போட்டு அதன் பிரகாசத்தை மறைத்து விடுவதென்பது ஒருபோதும் முடியாத காரியமாகும் இங்ஙனம் யான் கூறும் உண்மை விஷயங்களெல்லாம், உங்களில் சிலருக்குக் கசப்பாகயிருக்குமாயின், அக்கசப்பை நீங்கள் ஏற்றுக்கொண்டுதானாக வேண்டுமென்று யான் உங்களை வற்புறுத்தவில்லை. யான் கூறுவதில் உங்களுக்கு நம்பிக்கை யில்லாதுபோயின், உங்கள் சரித்திர உண்மைகளை நன்குணர்ந்த ஐரோப்பிய சரித்திராசிரியர்களான வேறெந்த உத்தமர்களையாவதுகேட்டுத் தெரிந்துகொவீர்களாக. அத்தகைய உத்தமர்கள், காட்டுமிராண்டிகளாயிருந்த ஐரோப்பியருக்கு கல்வியும் நன்னாகரீகமும் புகட்டியவர்கள் அராபிய முஸ்லிம்கள்தானவர் என்னும் உண்மையை எடுத்துக்கூறி, இக்கால மேனாட்டாரின் நவீன நாகரிக ஸைன்ஸு ஆராய்ச்சிகட்கெல்லாம் காரண பூதராயிருந்தவர்கள் அவ்வராபிய முஸ்லிம்களே யாவரென்ற உண்மையை ஒளியாது எடுத்தோதுவார்கள். இஸ்லாமுக்கும் கிறிஸ்துவ மதத்துக்கும், கஃபாவுக்கும் சிலுவைக்குமிடையில் ஏற்பட்டுள்ள பிரச்சினைகள் மிகப்பழைய பிரச்சினைகளே யாகும். அதனை இக்காலத்திலுள்ளவர்கள் மறுத்துக் கூறி மறைத்து விடுவதென்பது ஒருபோதும் முடியாக் காரியமாகும். எனவே உலக நிகழ்ச்சியின் உண்மை குறுகிய பார்வையினல் இல்லாமலாய்விடமாட்டாது. உண்மையில் கிறிஸ்துவ மதப்போதனைகள் மானுஷ்ய சரீரமுன்னேற்றத்துக்கும், ஆன்மார்த்தப் பரிபக்குவத்துக்கும் முற்ற முரணானதாயிருக்கிறதென்பதில் ஐயமில்லை. கிறிஸ்துவர்கள் எதை மறைத்துவிட்டபோதிலும் இதனை மறைக்க அவர்களால் ஒருக்காலும் முடியாது. இதை மறைப்பதாயின் அவர்களுடைய பைபிள் வேதத்தையே ஒளிக்கவேண்டியதாய்விடும். மேலும், அக்காலை ஐரோப்பிய நாட்டின்கண் பாதிரிமார்களின் ஆட்சியும், சன்னியாசத்தன்மையின் ஆதிக்கமும் மக்களை மேன்மைக்கு வரவிடாமல் தடுத்துக்கொண்டிருந்ததென்பதில் சந்தேகமில்லை. ஐரோப்பியரின் இவ்வித மூட நம்பிக்கைகளைப் போக்கி, பாதிரிமார்களின் ஆர்பாட்டங்களை அடக்கி சம சுதந்திரமாகவும், மானுஷ்ய உரிமைப்படியும் வாழ்ந்து முன்னேற்ற மார்க்கங்களை அக் கிறிஸ்துவர்கட்கு போதித்தது அக்கால இஸ்லாமிய கிரந்தங்களேயாகும். மேலும் ஐரோப்பிய சமூகத்தினர் அக்காலத்தில் பாதிரிமார்களின் பேச்சுகளை கேட்டுக்கொண்டு சிலுவை வணக்கங்களில் மூழ்கியிருந்த காலம்வரை அவர்கள் ஒரு சிறிதும் முன்னேற்றமே அடையவில்லை. அதைவிட்டும் அவர்கள் இஸ்லாமிய கிரந்தங்களின் வித்தைகளை கடைப்பிடித் தொழுகத் தலைப்படவே, நாளுக்கு நாள் மேன்மைக்கு வந்து, இப்போது உலகத்திலேயே முன்னேற்ற உச்சஸ்தானமடைந்தவர்களாய்க் காணப்படுகின்றனர். ஆனல், முஸ்லிம்கள் துரதிருஷ்டவசமாக இஸ்லாம் போதித்த முன்னேற்ற மார்க்கங்களை விட்டு, பிற்போக்கடைந்து பிறசாதியாரின் முன்னேற்ற நிலையைக்கண்டு வியப்படைகின்றனர். எனினும், முஸ்லிம்கள் ஐரோப்பிய நாட்டிற்குச் செய்த பேருபகாரங்களை எவ்வாற்றாலும் மறைத்து விடுவதென்பது ஒருபோதும் முடியாத காரியமாகும்.”

---

## முஸ்லிம் சோதிரர்காள் !

‘யவ்முந்நபி’ நாயக தினக்கொண்டாட்ட வைபவம் சமீபித்து வருகின்றது. அத்தினமானது முஸ்லிம்களின் ஜெயபேரிகைக்குப் பிரதான நந்நாளாகும். ஆகவே அத்தினத்தை சிறப்புடையதாகச் செய்ய இதுபொழுதே முயற்சி செய்யுங்கள். அதனல் நாம் இருபதிகளின் பாக்கியங்களையும் பெற்றுய்வதற்குள்ள அதிர்ஷ்டசாலிகளாக ஆய்விடுவோம் என்பது திண்ணம்.

# அவ்ரங்ஜேப் பாதுஷா ஹிந்துக்களின் விரோதியா?

அவ்ரங்ஜேப் ஆலம்கீர்பாதுஷா 'குரோதமுள்ளவராகவும், ஹிந்துக்களை வதை செய்பவராகவு மிருந்தார்' என அக்கால ஆங்கிலேய வியாபாரக்கம்பெனியார் நம் நாட்டில் வீண் புரட்சிகள் செய்துவந்ததை முன்னிட்டு, அவர் அவ்வர்த்தகக் குழாத்தினரைப் பிடித்து தண்டித்துத் துரத்திவிட்டாராதலின், இக்கால ஆங்கிலேய சரித்திரக்காரர்கள் அக்குரோதத்தை மனதில் மறைத்துக் கொண்டு அவ்ரங்ஜேப் பாதுஷாவை, கொடியவரென்றும், ஹிந்துக்களின் விரோதியென்றும், மதவெறியரென்றும், குரோதத்தன்மை யுள்ளவரென்றும் பலவாறான வீண் அபாண்டப் பழிகளை அவ்வுத்தமர்மீது சுமத்தி எழுதியும் பேசியும் வருகின்றனர். இதனைக் கண்ணுற்ற சில குறுகிய நோக்கமுள்ள ஹிந்து சரித்திரக்காரர்களுங்கூட அவ்வாங்கிலக் குழாத்தினரைப் பின்பற்றி அவ்ரங்ஜேப் மன்னரை அவதூறுபடுத்தி வருகின்றார்கள். இவ்விஷமப் பிரசாரம் வெகு காலமாக நடைபெற்று வருவதால், அவ்வுத்தம உதாரகுண சத்திய வேந்தரைப்பற்றிய உண்மை வரலாறுகளை, பொதுஜனங்கள் உள்ளது உள்ளவாறு உணர்ந்துகொள்ள முடியாமலிருந்து வருகின்றது.

"ஸுல்தான் ஆலம்கீரின் அருங்குண ஒழுக்க விசேஷங்களை மறைத்து வீணாக அவர் மீது அபாண்டப் பழிகளைச் சுமத்திவரும் குரோத புத்திக்கார எழுத்தாளர்கள், அத்துணை அபாரப் பிரயத்தனங்களில் ஒரு சிலவற்றை உத்தம மன்னரென பிரக்யாதிபெற்றுள்ள நவ்ஷேர்வான் பாதுஷா விஷயத்தில் புரிந்த போதிலுங்கூட, இவரும் அவ்ரங்ஜேபைவிட மிகக்கொடிய வேந்தராகப் பாவிக்கப்படலாம்" என்று மௌலானா ஷிப்லி நுஃமானீ அவர்கள் தங்கள் நூலில் கூறியுள்ளார்கள். ஆம்! இது முற்றும் உண்மையேயாகும். உண்மை அறியாத மக்கள் முன்னிலையில் ஒரு உத்தமரைப்பற்றிய உயர்குணங்களை எடுத்தோதாமல் அவர்மீது அபத்தமான படுமொழிகளை சுமத்திப் பிரசாரம் செய்துவந்தால், பாமர ஜனங்கள் என்ன செய்வார்கள்? ஆகையால் அவ்ரங்ஜேப் மன்னர் குரோதபுத்திக்காரர் என்று இக்காலை ஒரு சார்பாரால் கூறப்படுவதற்குக் காரணம், அவரது விரோதிகளின் தீய பிரசாரத்தின் பயனேயாகும் என்பதை நன்கு தெரிந்துகொள்கிறோம்.

நிற்க, குரோதக் குணமுள்ள ஆங்கிலேய சரித்திரக்காரருடையவும், ஹிந்து சரித்திரக்காரருடையவும் கூற்றின்படியே அவ்ரங்ஜேப் மீது முக்கியமாக என்ன குறை கூறப்படுகின்றதென்பதை ஈண்டு கவனிப்போம். முதலாவதாக, அவ்ரங்ஜேப் மன்னர் எல்லா ஹிந்து உத்தியோகஸ்தர்களையும் உத்தியோகத்தைவிட்டு அடித்துத் துரத்திவிட்டாரென்று கூறப்படுகின்றது. இது முற்றமுற்றப் பொய்யேயாகும். உண்மையில் அவ்ரங்ஜேபுடைய அரசாக்ஷிக் காலத்தில், அரசாங்க கணக்கு விவகாரங்களை கவனிக்கும் உத்தியோகங்கள் முழுமையிலும் காயிஸ்த ஜாதியினரான ஹிந்துக்களே நியமனஞ் செய்யப்பட்டிருந்து வந்தார்கள். இவர்கள் அவ்வுத்தியோக ஸ்தானத்துக்குரிய பரம்பரை பாத்தியஸ்தர்களென்றும் பாவிக்கப்பட்டு வந்தார்கள். முஸ்லிம்களோ கணக்கு விவகாரங்களில் சம்பந்தப்படாதவர்களாக இருந்துவந்தார்களாதலால், அரசாங்க கணக்கு வியவகாரமெல்லாம் முற்றும் காயிஸ்த ஜாதி ஹிந்துக்கள் வசமே ஒப்படைக்கப்பட்டிருந்தது. அவர்கள் என்ன புரட்டுகள் செய்தபோதிலும் கேட்பார் இல்லாதிருந்தது. எனவே அந்த ஹிந்துக் கணக்கர்கள் நல்லவிதமாக இலஞ்சம் வாங்கி ஜீவித்து வந்தார்கள். அக்கணக்கர்களின் இலஞ்ச வழக்கங்களையும் மோசத் தனத்தையும் ஒழிப்பதற்காக வேண்டி பிறகு சில முஸ்லிம் அறிவாளிகள் அக்கணக்குகளை கவனிக்கும் வேலையில் நியமனஞ் செய்யப்பட்டார்கள். அதன் பயனாய் கெட்ட வழக்கமாகிய இலஞ்சத்தொழில் ஒழிந்து போயிற்று. இலஞ்சம் வாங்காமல் காலங்கழிப்பது அந்த ஹிந்து கணக்கர்கட்கு பெருஞ் சங்கடமாயிருந்தது. எனவே அக்காலையே சுல்தான் அவ்ரங்ஜேப் ஆலம்கீருடைய பரிபாலன முறையின் மீது குறை கூறி வீண் அபவாதங்களை கிளப்பிவரலாயினர்.

மேற்கூறப்பட்ட வரலாற்றை ஒரு காரணமாக வைத்துக்கொண்டுதான் இக்கால ஹிந்து சரித்திரக்காரர்கள் ஒரே மூச்சாய் அவ்ரங்ஜேப் மன்னர், ஹிந்துக்களின் விரோதியா யிருந்தாரென்றும், ஹிந்து உத்தியோகஸ்தர்களை யெல்லாம் அடித்துத்துரத்திவிட்டு முஸ்லிம்களை ஏற்படுத்திக்கொண்டாரென்றும் குரோதமாய் எழுதிவருகின்றார்கள்.

இன்னமும் சுல்தான் அவ்ரங்ஜேப் மன்னரானவர் இராஜநிதியையும் பிரஜா தர்மத்தையும் சிறிதும் கைவிடாமல், தமது இராணுவ இலாக்காக்களிலுங்கூட ஹிந்து சிப்பாய்களை நியமித்து வைத்திருந்தார். இராணுவத்தளபதி உத்தியோகத்திலும் இராணுவ இலாக்காவிலுள்ள இதர உயர்உத்தியோகங்களிலுங்கூட எத்தனையோ ஹிந்துக்கள் மிகவும் கௌரவமாக நியமிக்கப்பட்டிருந்து வந்தார்கள். அஃதங்ஙனமிருக்க, இக்காலத்திய ஆங்கில அரசாங்கத்தினர், ஹிந்துக்கள் மீது பேரபிமானம் பூண்டவர்களென்று அவ்விந்துக்களே கூறிக்கொள்கின்றனர். அதற்கு அத்தாக்ஷியாய், எந்த இந்தியனாவது இராணுவத் தளபதி (கமாண்டிங் ஆபீஸர்) உத்தியோகத்தில் நியமிக்கப்பட்டிருக்கின்றானா? இல்லவே இல்லை. ஆனால் இவ்வுத்தியோகத்தில் அவ்ரங்ஜேபின் ஆட்சியில் எத்தனையோ ஹிந்துக்கள் நியமிக்கப்பட்டிருந்தார்கள். இதிலிருந்தே சுல்தான் அவ்ரங்ஜேபவர்கள் ஆங்கிலேயர்களைக் காட்டிலும் ஹிந்துக்கள் விஷயத்தில் எம்மட்டும் அபிமானமுள்ளவரா யிருந்தாரென்பது நன்கு விளங்குகின்றது.

இதன்கீழ் பொறிக்கப்படும் அட்டவணையானது, சுல்தான் அவ்ரங்ஜேப் ஆலம்கீர் அவர்கள் அரசாங்கத்தில் எங்கெந்த ஹிந்து கனவான்கள் இராணுவ இலாக்காவின் என்னென்ன உத்தியோகங்களில் நியமிக்கப்பட்டிருந்தார்களென்பதையும், அவர்கட்கு சம்பளம் எவ்வளவுதாராளமாய் அளிக்கப்பட்டு வந்ததென்பதைப்பற்றியும் ஹஜ்ரத் அல்லாமாஷிப்லிநுஃமானீ அவர்கள் தங்களது "ஆலம்கீரி" என்னும் கிரந்தத்தில் எடுத்துக் காட்டியுள்ளார்கள். அது பின்வருமாறு:—

(1) ராஜா பீம்சிங். இவர் ராணா உதயபூரின் புதல்வர்; ஜெயசிங்குடைய சகோதரராவர். இன்னவர், ஆலம்கீரின் 31-வது வருடக்கொண்டாட்டத்தின் போது தக்ஷிணத்துக்கு வந்து, பர்ஹாம்பூரில் ராணுவாதிகாரி உத்தியோகத்தில் நியமிக்கப்பட்டார். இவருக்கு மாதச்சம்பளம் 5-ஆயிரம் நாணயங்களாகும்.

(2) இந்திரசிங். இன்னவர் மஹாராணாஜீசிங்குடைய சகோதரர். 43-வது வருடத்தில் இவர் இரண்டாயிரம் நாணய சம்பளத்திற்கு உத்தியோகத்தில் நியமனஞ் செய்யப்பட்டார். 48-ம் வருடத்தில் 3-ஆயிரம் நாணயம் சம்பளத்துக்கு அவரது உத்தியோகம் உயர்ந்தது.

(3) ராஜா மான்சிங். இவர் ராஜா ரூப்சிங்கின் புதல்வர். இன்னவர் 26-ம் வருடத்தில் இராணுவாதிகாரியாக நியமனம் பெற்று 43-ம் வருடத்துக்குள் 3-ஆயிரம் நாணயம் சம்பளம் பெறும் அந்தஸ்தில் உயர்த்தப்பட்டார்.

(4) பஹாத்துர்சிங். இவர் ஜயசிங்கின் சகோதரராவர். 43-ம் வருடத்தில் இவர் 1500-நாணயம் சம்பளம்பெறும் உத்தியோகஸ்தராயிருந்தார்.

(5) அச்சலாஜீ. இவர் சிவாஜீயுடைய மருகராவர். இன்னவர் 29-ம் வருடத்தில் ஐயாயிரம் நாணயம் சம்பளம்பெறும் இராணுவத் தளபதி உத்தியோகத்திலிருந்தார். உயர் ஆசனம், துவிஜம், முரசு முதலியவற்றை உபயோகித்து கொள்ளும்கௌரவமும் அளிக்கப்பட்டிருந்தது.

(6) அர்ஜுஜீ. இவர் சிவாஜீயின்சகோதரப் புதல்வர். 48-ம் வருடத்தில் இரண்டாயிரம் நாணயம் சம்பளம் பெறும் உத்தியோகத்தில் நியமிக்கப்பட்டிருந்தார்.

(7) அங்குவஜீ. இவர் சாய்பாஜீயின் ஊழியராயிருந்தவர். இவரும் 31-ம் வருடத்தில் இரண்டாயிரம் நாணயம் சம்பளம் பெறும் உத்தியோகத்தில் நியமிக்கப்பட்டிருந்தார்.

(8) ராவ் அனுபசிங். இவர் ராவ் கர்ணன் என்பவரின் புதல்வர். இவரும் 31-ம் வருடத்தில் ஒரு கௌரவமான உத்தியோகம் பெற்றிருந்தார்.

(9) ராஜா அனுபசிங். இன்னவர் 36-ம் வருடத்தில் அப்ராஜ் என்னுமிடத்தில் இராணுவாதிகாரியாக நியமிக்கப்பட்டார். இரண்டாயிர நாணயம் இவருக்கு சம்பளம் கிடைத்து வந்தது.

(10) உதயசிங். இவர் கில்ஆதார் (கோட்டைப் பாதுகாப்பாளர்) உத்தியோகஸ்தராயிருந்தார். இவருக்கு 3-ஆயிரம் நாணம் சம்பளம் கிடைத்து வந்தது.

(11) பாஸ்தயூசிங். இவர் ஜமீன்தார் (நிலவரி வசூல் செய்கிற) உத்தியோகஸ்தராயிருந்தார். இவருக்கு சம்பளம் 3-ஆயிரம் நாணயங்கள்.

(12) கானுவஜீ. இவர் 5 ஆயிரம் சம்பளத்தில் ஓர் கௌரவமான உத்தியோகஸ்தராயிருந்து வந்தார்.

(13) சத்தா சாலபந்திலா. இன்னவர் 44-ம் வருடத்தில் தாரா கோட்டைக்கு கில்ஆதாராக நியமிக்கப்பட்டிருந்து வந்துள்ளார்.

(14) யஷின்சிங். இவர் ராஜாராம் சிங்குடைய புதல்வராவர். 25-ம் வருடத்தில் இவர் 1400-நாணயம் பெறும் உத்தியோகத்திலிருந்து வந்தார்.

(15) ராமசந்திரர். இவர்கன்னுட்டின் தானு (கச்சேரி)யில் முன்சிப் (நியாயாதிபதி) யாக நியமிக்கப்பட்டிருந்தார்.

(16) லோஸ் சந்து. இவர் இளவரசர் அஃலம் ஷாஹிடைய பிரதிநிதியாக இருந்து வந்தார். இவருக்கு "ராய ராயான்" என்ற பட்டமும் சுல்தான் அவ்ரங்ஜேபவர்களால் அளிக்கப்பட்டிருந்தது.

(17) பாகூ பஞ்சாரா. இன்னவர் 42-ம் வருடத்தில் 5-ஆயிரம் நாணயம் ஊதியம் பெறும் ஒரு உத்தியோகத்தில் நியமிக்கப்பட்டிருந்தார்.

(18) ஹக்யா. இன்னவர் 50-ம் வருடத்தில் 3-ஆயிரம் ரூபாய் ஊதியம் கிடைக்கப்பெறும் ஒரு உத்தியோகஸ்தராய் இருந்து வந்தார்.

(19) துர்காதாஸ் ராட்டூ. இன்னவர் 39-ம் வருடத்தில் 3-ஆயிரம் ஊதியத்தில் ஒரு உத்தியோகஸ்தராய் நியமிக்கப்பட்டிருந்து வந்தார்.

(20) ரூபசிங். இவர் ராஜா துவித சிங்குக்குப் பகரமாக இருந்தவர். இவர் 41-ம் வருடம் ஓராயிரம் ரூபாய் சம்பளத்தில் இருந்து வந்தார்.

(21) சௌபான் சிங். இவர் ஷித்தாரா கோட்டையின் கில்ஆதாராக நியமிக்கப்பட்டிருந்து வந்தார். முரசு கொட்டப்படும் மதிப்பும் இவருக்கு அளிக்கப்பட்டிருந்தது.

(22) ஷேர்சிங். இவர் ரஹபரீ கோட்டையின் அதிகாரியாக இருந்து வந்தார். 1500-நாணயம் சம்பளம் இவருக்குக் கிடைத்து வந்தது.

(23) அன்னதாதா. இவர்ராவுகாத்தா என்பவரின் புதல்வர். மெஹ்மனத் கோட்டையை முற்றுகையிட்டு பாதுகாத்துவரும்பேரதிகாரம் இவருக்கு அளிக்கப்பட்டிருந்தது.

(24) கிஷோர்தாஸ். இவர் மனோஹர்தாஸின் புதல்வர். இவர் 26-ம் வருடத்தில் ஷோலாப்பூர் கோட்டையின் கில்ஆதாராக நியமிக்கப்பட்டிருந்து வந்தார்.

(25) ராஜா கல்யாணசிங். இவர் 40-ம் வருடத்தில் 900 நாணயம் கிடைக்கப் பெறும் அதிகாரியாக நியமிக்கப்பட்டிருந்து வந்தார்.

இத்தனைபேர்களுமல்லாமல், சுல்தான் அவ்ரங்ஜேப் ஆலம்கீர் அவர்கள் சமுகத்தில் (தர்பாரில்) அநேக ஹிந்து உத்தியோகஸ்தர்களும் ஊழியர்களுமிருந்துவந்தார்கள். இவ்விபரங்களை 'லேன் போல்' சரித்திர நூலில் விரிவாய்க் காணலாம்.

இவ்வாறெல்லாம் அவ்ரங்ஜேப் பாதுஷா ஹிந்துசமூக அபிமானியாகவும், தூய மனமுள்ள உத்தமராகவும், குரோதஞ் சிறிதுமற்ற தூய மனத்தினராகவும், பரோபகாரியாகவும், பிரஜாபரிபாலகராகவும் இருந்துவந்துங்கூட, அவரை இக்காலக் குரோதப் புத்தியுள்ள ஹிந்துக்கள், அநியாயக்காரரென்றும், குரோதப் புத்திக்காரரென்றும், ஹிந்துக்களின் விரோதியென்றுங் கூறி வருகின்றனர். இது இன்னோரின் குரோதத்தன்மைக்குரிய அத்தாக்ஷியே யாகுமன்றோ?

---

# ஆப்ரிக்கர்வின் பயங்கரப் பாம்புகள்

## கடவுளை நம்பினோர் காப்பாற்றப்படுவர்.

(இது ஓர் ராணுவாதிகாரியின் விசித்திர அனுபவம்.)

ஆப்ரிக்காவின் மலைப்பாம்புகள் கொடிய விஷமுள்ளவைகளல்லவெனினும், மிகவும் பயங்கரமானவையும் தீங்கை யுண்டாக்குபவையுமாகும். அவை இருபது இருபத்தைந்து அடி நீளமுள்ளனவாகவும், அதற்கேற்ற பருமனுள்ளனவாகவு மிருக்கின்றன. அவை எங்கேனும் மிக நிசப்தமாய் தரையின்மீது பதுங்கிப் படுத்துக்கொண்டிருக்கும் சமயம் பார்த்து, மிகத் தந்திரமாய் சிறிய சிறிய காட்டு மிருகங்களையும், காட்டுப் பன்றிகளையும் பிடித்துத் தின்றுவிடும். தீனிக்காக அகப்பட்டுக்கொண்டமிருகங்களைக் கொன்று துண்டங்களாக்காமல் அப்படியே வாய்க்குள் போட்டு எலும்புகளெல்லாம் நரநர வென நொறுங்கிப் போகும்படி சுவைத்து விழுங்கிவிடும்.

அப்பெரிய மலைப்பாம்புகளைப்பற்றிய விசித்திரமான வரலாறுகள் பலவற்றை யான் கேள்விப்பட்டிருந்தேன். மேலும் ஏற்கெனவே யான் அம் மலைப்பாம்புகளைக் கொஞ்சம் தூரத்திலிருந்து பார்த்துமிருந்தேன். அப்பாம்புகள் வழியில் குறுக்கே இருந்தபோதிலும் அதை நாம் தாண்டிவிடாதிருந்தால் அவை தானுகவே ஒதுங்கி அப்பால் போய்விடும். அங்ஙனமின்றி, அவற்றைத் தாக்குவதற்கு நாம் தலைப்பட்டு அதற்குத் தப்பி ஓடும் உபாயம் கிடைக்காமற் போனால் தான் அவை நம்மையும் மிக எளிதில் கொன்றுவிடும்.

யான் ஆப்ரிக்காவின் காட்டுப்பகுதிகளில் சஞ்சரித்தபோது, ஒரு பெரும் பயங்கரமான மலைப்பாம்புடன் எதிர்த்து நிற்க வேண்டியிருந்ததால், அச்சந்தர்ப்பம் எனக்கொரு துரதிருஷ்டமான நேரமாகவே இருந்தது. யான் அவ்வாபத்தை விட்டும் உயிர் தப்பிப் பிழைத்துவந்த சம்பவத்தை ஒரு போதும் மறக்கவே மாட்டேன்.

டன்கனேகா கரையோரத்தில் யான், முஸ்லிம் நண்பர்களோடு ஒருசமயம் தங்கியிருக்க நேரிட்டது. அந்நகரத்தை அடுத்தபகுதியிலிருந்தே காடுகளும் பள்ளத்தாக்குகளும் தொடர்ந்து ஆரம்பமாகின்றது. ஆங்காங்கு பசுமையான மரங்களும் புற்றரைகளும் அதிகமிருந்தன. அப்பசுமையான இடங்களில் கவுதாரிகள், நீர்க் கோழிகள் மற்றும் பல்வகை பக்ஷி இனங்கள் அதிகம் சஞ்சரித்துக்கொண்டிருந்தன. மாலை நேரத்தில் யாங்கள் துப்பாக்கி எடுத்துச்சென்று வேட்டையாடி இரவு போஜனத்துக்காகவென்று பல பக்ஷிகளை வெகு எளிதில் சுட்டு எடுத்துக்கொண்டு வந்து விடுவோம்.

ஒருநாள் எனது சமையல்காரன் வந்து, சமையலுக்காக விடுதியில் யாதுமில்லையாதலின் துப்பாக்கி எடுத்துச் சென்று ஏதேனும் வேட்டையாடி வாருங்கள் எனக் கூறினன். உடனே யான் என் துப்பாக்கியில் ரவை குண்டுகளை நிரப்பிக்கொண்டு, துணைக்கு என்கூட ஒரு பையனையும் அழைத்துக் கொண்டு காட்டுப்பக்கமாகச் சென்றுவிட்டேன்.

காட்டின் ஒரு பக்கத்தில், நீர்வாழும் பட்சிகளெல்லாம் ஒருமிக்கக் கூடியிருக்கும் பசுமையான புற்றரையும் நீர் நிலையும் என் கண்ணுக்குத் தென்பட்டது. அங்கு பலவிதமான பட்சி இனங்கள் இருந்தன வெனினும் மான், முயல் முதலியன ஒன்றுமில்லை. ஆகையால் யான் பெரிய குண்டு துப்பாக்கியை உபயோகிக்கவேண்டிய அவசிய மேற்படவில்லை. காட்டுக்குள் செல்லும் கடும்வழியோடு யான் மிக ஜாக்கிரதையாகச் சென்றேன். மார்புவரை நீண்டு வளர்ந்திருந்த புற்களையும் புதர்களையும் விலக்கிக்கொண்டு புகுந்து சென்றேன். உயர்ந்து வளர்ந்திருந்த புற்கள் மறைவிலிருந்து துப்பாக்கிக் குறிபார்த்துச் சுட நல்ல வசதியிருந்தது.

அவ்விடத்தில் கணக்கற்ற பாம்புகளும் இருந்தன. சில பாம்புகளை யான் மெறித்துக்கொண்டும், தாண்டிக்கொண்டும் சென்றுவிட்டேன். யான் மெறித்தும், தாண்டியும் சென்ற பாம்புகள் கொடிய விஷமுள்ளவையல்ல. எனினும் அவை கடித்தவுடன் சரியான சிகிச்சை செய்யப்படாவிட்டால் நிச்சயம் மரணமடைந்து போகவேண்டியதுதான்.

கடி, விஷ நிவாரண மருந்துகளை யான் கைவசம் எடுத்து வைத்துக் கொள்ளாமல் காட்டுப் பிரதேசங்களுக்குச் செல்லும் வழக்கமில்லை. பாம்புகள் கடித்தாலும் அதன் விஷத்தைப் போக்குவதற்குரிய மருந்தையும் யான் கூடவே எடுத்துச் சென்றிருந்தேன். காலிலும் இராணுவத் தோல் பட்டை அணிந்திருந்தேன்.

நிற்க யான், என் வேட்டைக்குத் துணையாக அழைத்துச் சென்றிருந்த பையன், புதர்களிடையே வழித்தவறி எங்கோ மறைந்துவிட்டான். எனவே, யான் தன்னந் தனியனாகிவிட்டேனாயினும் விடுதி அருகே இருந்தமையால் அவன் வந்து சேர்ந்துவிடுவானென்ற நம்பிக்கையிருந்தது.

ஓரிடத்தில் நீர்ப்பறவைகளின் கூட்டமொன்றை கண்டேன். அங்கு எனக்குப் பிரியமான காடை கவுதாரிகளுமிருந்தன. யான் அவசர அவசரமாக என் துப்பாக்கியைச் சரிப்படுத்திக்கொண்டு அவ்விடத்தை நோக்கி ஓடினேன். ஓடியவழியில் புற்கள் உயர்ந்து அடர்ந்து வளர்ந்திருந்தன வெனினும், யான் அவற்றை இலக்ஷியம் செய்யாமல் ஓடினேன். அச்சமயம் ஏதோ என்காலில் தட்டுப்பட்டது. மேலும் அது என்காலை சுற்றிக்கொண்டதுபோலும் தெரியவந்தது. யான் காலில் முழங்கால்வரை தோல்பட்டை அணிந்திருந்தமையால் அதை இலக்ஷியம் செய்யாதிருந்தேன். சிறிய பாம்புகள் அடிக்கடி அவ்வாறு காலை சுற்றிக்கொள்வதும், யான் அதை உதறித்தள்ளுவதும் பன்முறை என் அனுபவமாயிருந்ததால், அதுவும் அவ்விதமாக இருக்கக்கூடுமென்று கருதி காலை உதறினேன். எனினும் என் காலை சுற்றிக்கொண்ட வஸ்து என் காலை விட்டும் விடுபடவில்லை. அப்போதுதான் எனக்கு சிறிது அச்சம் ஏற்பட்டது. அதனால் அவ்விடத்தை விட்டு கடந்துசெல்லவும் தைரியம் வரவில்லை.

உடனே, அடர்ந்த புற்றரையை விட்டும் என் காலை அப்புறம் எடுத்து நோட்டமிட்ட அந்த க்ஷணமே யான் திடுக்கிட்டுப் போனேன். ஏனெனின் பயங்கரமான மிகப் பெரிய மலைப்பாம்பொன்று என் காலை இறுகப் பிடித்து சுற்றிக்கொண்டிருந்தது. அப்பாம்பின் வாயும் கண்களும் என்னையே கூர்ந்து நோக்கிக்கொண்டிருந்தன. ஒரு மனிதனை எளிதில் கடித்து விழுங்கிவிடத் தக்க அத்துணைப் பருமனுள்ள பயங்கரமுள்ளதாய் அந்தப் பாம்பு இருந்தது.

அப்படிப்பட்ட மிக பயங்கரமான சங்கடத்தில் அகப்பட்டுக்கொண்ட எனக்கு, என்ன உபாயம் செய்வது? எவ்வாறு தப்புவதென்று யாதும் புலப்படவில்லை ; அச்சத்தினால் என் மனம் படபடவென்று துடித்தது ; என் கால் கைகள் உதறலெடுத்துக் கொண்டன ; என் சுய உணர்ச்சியே என்னிடம் இருப்பதாய்த் தெரியவில்லை ; சிறிது நேரம் அப்படியே ஸ்தம்பித்து நின்றுவிட்டேன். அங்ஙனம் யான் சங்கடத்தில் சிக்குண்டு அவஸ்தைப்பட்டது ஒரு சில நிமிஷங்களேயாயினும், அஃது எனக்கு ஒரு பெரும் யுகமாகப் புலப்பட்டது. எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணிவிட்டேன். தப்பிக்கும் வழி புலப்படாததால் அப்பெரும் மலைப்பாம்பின் வாயிக்கு இரையாகி இறந்தே போய்விடுவேனென்னும் கவலை கொண்டேன். ஆகவே உயிரை வாங்கும் தேவத்தூதர் என் தலைக்கு மேல் வந்து வட்டமிட்டுக் கொண்டிருப்பதாய் எனக்குத் தெரியவந்தது.

மரணம் நேரிட்டாலும் சரியே, பிழைத்தாலும் சரியே எதுவும் ஆண்டவன் ஏற்படுத்திய விதிப்படியே முடியட்டும் என்னும் திட எண்ணங்கொண்டு, தெய்வத்தை நினைத்த வண்ணம் அப்படியே சில வினாடிவரை கண்ணை மூடி மெய்மறந்து நின்றுவிட்டேன். அப்போது துப்பாக்கியும், வெட்டுக்கத்தியும் என்னிடம் இருப்பது என் நினைவிற்கு வந்தது. உடனே துப்பாக்கியை சரிபடுத்திக்கொண்டு கத்தியை உருவிக்கொண்டு பாம்பு சுற்றிக்கொண்டிருந்த காலை நோக்கினேன். என்ன ஆச்சரியம்! பாம்பும் காணப்படவில்லை. வேறு எதுவும் காணப்படவில்லை. ஆண்டவனை நினைத்து தியானித்ததன் பாக்கியத்தால் அப்பாம்பு மாயமாய் மறைந்தொழிந்ததென்று தைரியம் கொண்டேன். உயிர்தப்பிய யான் இறைவனைத் துதித்துவிட்டு, வேறு பட்சி எதையும் வேட்டையாடாமல் அவ்விடத்தை விட்டு இருப்பிடத்தை நோக்கி ஓட்டம் பிடித்தேன். அங்கே போய்ச் சேர்ந்ததும் என் நண்பர்கள் என்னை வரவேற்று என் சீர்குலைந்த நிலையைக் கண்டு வியந்தனர். எனவே, யான் பாம்பு வசம் அகப்பட்டு, என் உயிர் தேவத்தூதர் கைவரைப்போய் திரும்பிய பயங்கரமான வரலாற்றை எடுத்துக் கூறினேன். எனவே, என் உயிர் தப்பியதற்கு அவர்களும் இறைவனைப் போற்றினர்.

**கடவுளை நம்பினோர் காப்பாற்றப்பவோர் என்பதை இதனால் நன்கு தெரிந்துகொள்கிறோம்.**



# கீழ்நாட்டு - மேனாட்டு நாகரிகம்.

ஒவ்வொரு சமூகத்தின் வாழ்வும் தாழ்வும் அதன் நல்லாசார ஒழுக்கத்தையும், விவேகாசாரத்தையும் சார்ந்தனவாயிருக்கின்றன. எனவே, இது விஷயத்தில் அச்சமுகம் சிறிதேனும் தவறுதலாய் நடந்துழலுமாயின், நிச்சயமாய் அச் சமூகம் முன்னேற்ற வாழ்வின் பிரதான பாக்கியத்தை இழந்ததாய் விடுகின்றது. அதன் காரணமாய் அச் சமூகம் பல திறப்பட்ட மனோசங்கடங்களிலும் ஆன்மார்த்த வீழ்ச்சியிலும் சிக்குண்டு நசித்துப் போகின்றது. இவ்வித வீழ்ச்சியான கேவல வாழ்க்கை நரக வாழ்க்கைக்கே ஒப்பாகும்.

## நாகரீக உதயஸ்தலம்

பொதுவாக நன்னாகரிகம் என்றால், ஒரு நாட்டார் அல்லது ஒரு சமூகத்தார் தங்களிடையே வுள்ள துர்க்கிருத்தியங்களையும் தீயத் தன்மைகளையும் விட்டுத் தொலைத்து சீர்திருத்தமடைந்து மிளிர்வதற்குச் சொல்லப்படும். எனவே, பொதுவாக மேனாட்டாரும் நம் கீழ்நாட்டாரும் நாகரீகத்தைப் பின்பற்றி வருவதாகத்தான் கூறுகின்றார்கள். ஆனால் அவ்விரண்டில், கீழ்நாட்டாரின் நாகரிகம் சிறந்ததா? அல்லது மேனாட்டாரின் நாகரிகம் சிறந்ததா? என்பதை ஈண்டு நாம் கவனித்தல் அத்தியா அவசியமாகும்.

நிற்க, நாகரிகத்துடையவும், நல்லாசாரத்துடையவும் பிரகாசமானது முதன்முதலாய் நம் கீழ்நாட்டின் திசையிலிருந்துதான் தோன்றி உலகத்தை ஜோதிமயமாய்ச் செய்து வந்ததென்பதை அறிவுள்ள யாவரும் அறிந்திருத்தல் கூடும். அஃதிங்ஙனமிருக்க, இது போழ்து சிலகாலமாக மேனாட்டாருங்கூட தங்களது நாகரிகத்தையும் ஆசாரத்தையும் உலகின்கண் பகட்டான முறையில் பரத்தி வருவதை அறிகின்றோம். ஆம்! எந்த ஒரு நல்ல விஷயமும் முதலாவதாக கீழ்நாட்டிலிருந்துதான் உதயமாகி எங்கும் பரவி இறுதியில் மேனாட்டில்போய் அஸ்தமிப்பதுண்டு. அவ்வஸ்தமிப்புக் காலத்தின் ஒளியை அம்மேனாட்டார்கள் நூதனமான தோற்றத்தில் வெளிப்படுத்திக் காட்டுவார்கள்.

சுருங்கக் கூறுமிடத்து, பிரபஞ்ச முழுதையும் பிரகாசப்படுத்தி வைக்கும்படியான சூரியன் சந்திரன் முதலியன கீழ்திசையினின்றுதான் உதயமாகி மேற்குத் திசையில்போய் இறுதியில் அஸ்தமிப்பதைப்போல், நன்னாகரிகம் நல்லாசாரம் யாவும் ஆதியில் கீழ்நாட்டிலிருந்தே தோன்றி பிறகு மேனாட்டிற் பிரவேசித்து அஃதொரு புதுத்தோற்றமாய்க் காணப்பட்டு வருகின்றது. ஆகவே நாகரிக நல்லாசாரத்தின் உற்பத்திஸ்தலம் கீழ்நாடாகவே இருப்பதால் அதன் கண்ணியம் கீழ்நாட்டுக்கே உரியதாகும்.

## சமூகாசாரம்.

நாகரிகம் என்பதற்கு அடுத்தபடியாய் ஈண்டு நம் கவனிப்புக்கு எடுத்துக்கொண்ட விஷயம் சமூகாசாரம் என்பதாகும். சமூகாசாரம் என்பது, ஓரினத்தவர்கள் நற்குண நல்லொழுக்கத்தை ஏற்றுக்கொண்டு நடந்துகொள்ளும் முறைமைக்குச் சொல்லப்படும். இச் சமூகாசார விஷயத்தில் ஆண்பாலாருக்கும் பெண்பாலாருக்கும் தாரதம்மியமுண்டு. இதில் பிரதானமாய் கவனிக்கப்படும் விஷயம்

ஆணும் பெண்ணும் உலக வியவகாரங்களில் கூடி இருத்தல் என்பதாகும். அன்னிய ஆண் மக்களும் பெண் மக்களும் கலந்துறைவது நன்மை பயக்குமா? தீயனவாகுமா? என்ற விஷயத்தை உலகானுபவ வாயிலாக நாம் நன்கு தெரிந்துகொள்கின்றோம்.

மனிதரின் மனோ இச்சை ஒருநிலைப்பட்டதன்று. ஒவ்வொரு நிமிஷத்திற்கு நிமிஷமும் மாறுபட்டுக் கொண்டும், பேதகமடைந்துகொண்டும், சீர்கெட்டலைந்துகொண்டும், பிறகு சீர்திருந்திக்கொண்டும் பலவாறு இருப்பதாகும். சிறு பாலப்பிராயத்தில் ஆண் பிள்ளைகளும் பெண் பிள்ளைகளும் அன்பான முறையில் கூடி ஆடி ஓடி விளையாடிக்கொண்டிருப்பதைப்போல், தக்கபருவமடையுங்காலத்தில் அங்ஙனம் கூடி யுறவுபூண்டு விளையாடிக்கொண்டிருப்பது நன்மை யாகமாட்டாது. அஃதொருக்கால் தீமையையும் சீர்கேட்டையும் விளைவிப்பதாய் விடும். ஆகையால் ஆண் பிள்ளைகளோ, பெண் பிள்ளைகளோ தக்க பருவமடையத் தொடங்கி விடுவார்களாயின் அவர்களுடைய குண ஒழுக்கத்தையும், நடையுடை பழக்கத்தையும் மிக ஜாக்கிரதையாக கவனித்துப் பாதுகாத்து வரல் வேண்டும். பருவமடைந்த பின் ஆண்பாலரும் பெண்பாலரும் கலந்துட்கார்ந்து கல்வி பயின்று வருவதற்காக வெளியில் அனுப்பப்பட்டு வருவதும் சீர்கேட்டை விளைப்பதேயாகும்.

## பர்தாவின் அவசியம்

ஆண்பாலரும், பெண்பாலரும், பருவமடைந்த காலத்தின் சேஷ்டைகளை விட்டும் நீங்கி பரிசுத்தமா யிருந்துகொள்ள வேண்டுமென்ற அரிய கருத்துடனேயே பர்தா வழக்கம் ஏற்பட்டிருக்கின்றது. மேலும் அன்னிய ஆடவர்களைவிட்டு ஒதுங்கியிருந்து தம் மனத்தையும் கண்களையும் உடலையும் தீய நடப்பை விட்டும் பாதுகாத்துக்கொள்வதற்கே பர்தாவென்று சொல்லப்படும். பர்தாவின் தத்துவார்த்தம் இத்தகையதாயிருக்க, பர்தாவென்றால் மேனாட்டுப் படிப்பை கற்காமலும் உலக விஷயங்களைத் தெரிந்துகொள்ளாமலும் கிணற்றுத் தவளைகளே போன்று கிடந்துழல்வதற்குச் சொல்லப்படுமென்று ஒருசிலர் கருதிக்கொண்டிருப்பது முற்றுந் தவறான கருத்தேயாகும்.

நம் பரிசுத்த தீனுல் இஸ்லாமானது பர்தாவை அனுஷ்டித்து நடக்கவேண்டுமென்னும் விஷயமாய் போதித்துள்ள கட்டளையானது ஆழ்ந்த கருத்தும் அரிய தன்மையும் நிரம்பியதாயிருக்கின்றது. பர்தாவை அனுஷ்டிக்காத இதர சாதியினரில் ஆண் பெண் கலப்பு வாழ்வினால் அடையுஞ் சீர்கேட்டையும் ஒழுக்க பங்கத்தையும் உள்ளுணர்ந்து பார்த்தாலே அதன்கெடுதி நன்கு தெரிந்து விடுகின்றது. ஆகவே கீழ்நாட்டாரின் நந்நாகரீக வழக்கமாகிய பர்தா அனுஷ்டானம் எத்தகைய பயனுள்ள ஆசாரமாயிருக்கிறதென்பதை நன்கு தெரிந்துகொள்கிறோம்.

## கல்வியும் சம உரிமையும்

கீழ்நாட்டு நன்னாகரிகத்தில் இரண்டாவதாய் சிறந்துள்ள விஷயம், இஸ்லாம் மதமானது கல்வி சம்பந்தமாய் ஆண்பாலாருக்கும் பெண்பாலாருக்கும் சம உரிமை அளித்திருப்பதேயாகும். "கல்வியை கற்பது முஸ்லிமான ஆண்பாலார்மீதும் பெண்பாலார்மீதும் கடமையாகும்" என்று சமமாக இஸ்லாம் மதம் கட்டளையிட்டிருப்பதிலுள்ள அர்த்த புஷ்டியின் அமைப்புத்தானென்னே? ஆண்பாலார் இவ்வளவு அதிகமாய் கற்கவேண்டும் என்றோ, பெண்பிள்ளை கொஞ்சம் குறைவாய் கற்க வேண்டுமென்றோ தாரதம்மியமான நிபந்தனை இஸ்லாத்தில் இடப்படவில்லை. அவரவர் சக்திக்கும் ஆற்றலுக்குமேற்ப எவ்வளவு அதிகம் வேண்டுமாயினும் கற்றுத்தேர்ந்து பாண்டித்தியம் பெறலாம். எனவே ஆண்களைப்போல பெண்களும் மார்க்கக் கல்வியிலும் உலகக்கல்வியிலும் தேர்ச்சியடையலாமென்பதற்கு யாதோர் ஆட்சேபனையுங் கிடையாது. ஹஜ்ரத் ஆயிஷாநாயகி (ரலி.) அவர்களும், ஹஜ்ரத்ராபிஆபஸரீ (ரலி.) அவர்களும் கல்வி விஷயத்தில் எம்மட்டுந் தேர்ச்சி யுடையவர்களா யிருந்தார்களென்பதை கவனித்தலே, இஸ்லாத்தில் பெண் மக்களுக்குக் கல்வி விஷயத்தில் எத்துணை ஸ்வதந்திரம் அருளப்பட்டிருக்கிறதென்பதற்கு போதிய சான்றாயிருக்கின்றது.

பெண்கட்கு மார்க்கக் கல்வியோடு உலக சம்பந்தமான கல்வியும் அத்தியா அவசியமானதுதான் என்பதைக் கொண்டு, நம் பெண்களை மேனாட்டுப் பெண்களுக்கு நிகராக



வீணான கல்விகளிலும் துராசாரக் கிருத்தியங்களிலும், நிர்வாணக்கோல நடிப்புகளிலும் ஈடுபடுத்தி இஸ்லாமிய நாகரிகத்தைக் கெடுத்துவிடலாகாது. நம் கீழ்நாட்டு (இஸ்லாமிய) பெண்மணிகள், மேனாட்டு ஆங்கிலப் பெண்களின் நடையுடைப் பாவனைகளை நவீன நாகரிகம் என்று தவறாக எண்ணிக்கொண்டு அதனைப் பின்பற்றி நடந்து வருவதினாலான கெடுதிகளையும், அனாசாரங்களையும் விபரமாய்த் தெரிந்துகொள்ள வேண்டுமாயின், மேனாட்டறிஞரான டாக்டர் மேக்கலே என்பாரின் நூலைப் படித்துப் பார்ப்பதே போதுமானதாகும். அவர் அதில் மேனாட்டாசாரமாகிய நவீன நாகரிகப் போக்கின் சீர்கேடுகளை நல்லவிதமாய் விளக்கி இருக்கின்றார்.

## சைன்ஸும் உலகப்போக்கும்

விஞ்ஞான ஆராய்ச்சியினால் கண்டுபிடிக்கப்பட்டு நவீன நாகரீக சாதனங்கள் என்ற பெயரால் உலகமெங்கும் பரவியுள்ள சைன்ஸுக் கருவிகளின் ஆர்ப்பாட்டங்களும் கவனித்தற் குரியனவாகவே இருக்கின்றன. உதாரணமாய், நவநாகரீக முன்னேற்றத்தினாலான பொருட்களில் ஆகாய விமானம், நீர்மூழ்கிக் கப்பல், அச்சு இயந்திரம் முதலியவைகள் மிகமிக விசித்திரமானவைகளாகும். இச் சாதனங்கள் மானிடர்களுக்கு உலகத்தின் சம்பந்தங்களை மிகமிக நெருங்கியனவாய்ச் செய்துவிட்டன. உதாரணமாய், அச்சு இயந்திரச் சாதனத்தை எடுத்துக் கொள்வோம். இதன் காரணமாய் ஒரு சொற்ப காலத்திற்குள் உலகத்தின் ஒரு கோடியிலுள்ளவர்கள் மற்றோர் கோடியில் வதிவோர்களின் பேச்சுக்களையும் காரியாதிகளையும் மிகத் தெளிவாய்த் தெரிந்துகொள்கிறார்கள். கல்வியாராய்ச்சி சம்பந்தமாகவும் இவ்வச்சு இயந்திர சாதனமானது மனிதகோடிகளுக்கு அளவற்ற அனுகூலங்களையும் சௌகரியங்களையும் புரிந்துள்ளது.

சைன்ஸ் ஆராய்ச்சியின் மற்றோர் சாதனமான மின்சாரத்தின் ஆர்ப்பாட்டங்கள் சொல்லத்தரமன்றதாகும். இந்த எலக்டிரிக் பவரின் காரணத்தால், இக்கால உலகத்தில் எந்தக் காரியத்தையும்மிக எளிதில்செய்துமுடிக்கும் சௌகரியம் ஏற்பட்டுப் போயிருக்கின்றது. பெரிய இயந்திரம் ஓட்டுதல் முதற்கொண்டு, வெய்யிற் காலத்தில் குளிர்ந்தகாற்று வீசச்செய்யும் வேலை வரைக்கும் இந்த விசித்திர மின்சார சக்தியின் வாயிலாய் செய்துமுடிக்கும் அனுகூலம் ஏற்பட்டுப்போயிருக்கின்றது.

அவ்வித நவநாகரிகச் சாதனங்களினாலான பலாபலன்-அதாவது நலவு இடர்களையும் நாம் அத்தியாவசியமாய் கவனித்தே ஆகவேண்டி இருக்கின்றது. முதலாவதாக அச்சு இயந்திர சாதனத்தைக் கைகொண்டுள்ள பத்திரிகைக்காரர்களில் ஒருசிலர், எங்கோநடந்த ஓர் அர்ப்பசொர்ப்ப விஷயத்தையும் மிகப் பிரமாதப்படுத்தி உலக முற்றும் ஒரு பெரிய குழப்பத்தை உண்டாக்கி வைத்துவிடுகின்றனர். உதாரணமாய், சில வருடங்கட்கு முன் டைம்ஸ் ஆப் இந்தியாவில் ஒரு விநோதச் செய்தி வெளிவந்திருந்தது. அதாவது, "ஐரோப்பிய மாதொருத்தி ஒருதெருவழியே போய்கொண்டிருந்த பொழுது நாய் ஒன்று அவளுக்குப் பின்னால் சிறிது வேகமாய்வந்துகொண்டிருந்தது. இதை கண்டதும் அம்மாது தன்னைத்தான் அந்த நாய் துரத்திவருகிறதென்று எண்ணி பயந்து அலறிக்கொண்டு ஓடினாள். இதனால் அங்கு சந்தடி ஏற்பட்டுவிட்டது" என்பதே. இதுதான் அச்சம்பவத்தின் உண்மை வரலாறாகும். ஆனால் இச்செய்தி அப்பத்திரிகையில் சிறிது கடப்பாக வெளிவந்தவுடன் மற்றப் பத்திரிகைக்காரர்கள் அச்செய்தியை ஒன்றுக்குப் பத்தாகப் பெருக்கி பிரமாதப்படுத்திப் பிரசுரித்துவிட்டனர். இறுதியில் அச்செய்தி எவ்வளவு தூரமாகிவிட்டதெனின், "அந்த ஊரில் நாய்களெல்லாம் வெறிப் பிடித்து அலைகின்றனவென்றும், ஐரோப்பிய பெண்களை கண்ட கண்ட இடங்களில் துரத்திக் கடித்துத் துன்புறுத்துகின்றனவென்றும், அதனால் அவ்வூர் முழுதும் பெரும் புரளி ஏற்பட்டுவிட்டதென்றும், ஆகையால் அரசாங்கத்தார் இதை கவனித்து, விசாரணை கமிட்டியொன்றை ஏற்படுத்தி அவ்வூருக்கு அனுப்பி, தக்க நடவடிக்கை எடுத்துக்கொண்டு, ஜனங்களுடைய கவலைகளை நீக்கவேண்டுமென்றும் ஒவ்வொரு வெள்ளைக்காரப் பத்திரிகைகளும் எழுதத் தொடங்கிவிட்டது.

இது எம்மட்டும் விபரீதமாய் முடிந்துவிட்டதென்பதை சிறிது ஆராய்ந்து பாருங்கள்! இது மேனாட்டு நவநாகரிக முறைமை

யினால் மிக எளிதில் நடந்துவிட்ட விபரீதமாகும். பொதுவாக மேனாட்டு நாகரிக வழக்கத்தில் ஒரு பிரச்சினை எழுமாயின், அது எம்மட்டுதூரம் உண்மை, அதனை யொட்டி நாம் எடுத்துக்கொள்ளும் நடவடிக்கை நியாயமானதுதானா என்பவைகள் ஒருசிறிதும் கவனிக்கப்படுவதில்லை.

### யுத்தக் கருவிகளின் பெருங் கேடு.

நவநாகரிகச் சாதனங்களினாலான கேடுகள் இன்னுமிருக்கின்றன. உதாரணமாய், ஆகாய விமானமும், நீர்மூழ்கிக் கப்பலும் கண்டுபிடிக்கப்பட்டது எதற்காக? ஜனங்களுடையவும் தேசத்துடையவும் அனுகூலத்துக்காகவல்ல. ஆனால் யுத்தக்காலத்தின்போது ஆகாயத்தில் பறந்து சென்று பகைவர்கள்மீது குண்டுகளை எறிந்து வெகு எளிதில் அன்னோரை நாசப்படுத்திப் போடவேண்டுமென்பதற்காகும். நீர்மூழ்கிக் கப்பலும் அவ்வாறே எதிரியின் கண்ணுக்குப் புலப்படாமல் சமுத்திர நீருக்குள் மீன்போல் புகுந்து சென்று எதிரிகளின் கப்பல்களை இடித்துத் தாக்கி உடைத்துச் சின்னாபின்னப்படுத்தி அன்னோருக்கு அளவற்ற நஷ்டத்தை யுண்டாக்கவேண்டு மென்பதற்கேயாகும். இஃதெல்லாம் நவநாகரிக முன்னேற்றத்தின் காரணமாய் மேனாட்டார்கள் சாதித்த சாதனைகளாகும்.

யுத்தகாலத்தின் நியாய நடத்தை யாதெனின், பகைவர்களோடு போர்புரியின், தன் பல பராக்கிரமத்தைக் கொண்டு எதிரியை வென்று ஜயம் பெறுவதேயாகும். இது சாமர்த்திய ஆண்பிள்ளைத் தன்மையுமாகும். இவ்விதப் பராக்கிரமந்தான் கீழ்நாட்டு சரித்திரத்தில் மிகக் கீர்த்தியோடு விளங்கிவந்துளது. ஆனால் மேனாட்டாரின் நவநாகரிகத்தில் அவ்வித புஜபல பராக்கிரமமும் ஆண்பிள்ளை வீரத்தன்மையும் எடுபட்டுப்போய்க் கோழைகளின் கபடச்செயல்களுக் கொப்பத் திருட்டுத்தனமாய் எதிரிகளை தாக்குவதும், அவர்கள் ஏமார்ந்துள்ள சந்தர்ப்பத்தில் உயிருக்கு ஹானியை உண்டாக்குவதும் இந் நவீன கால ஆண்பிள்ளைத்தன்மையாயிருந்து வருகின்றது. இதுதான் மேனாட்டு நவநாகரிகத்தின் பிரயோஜனமாய் இருந்து வருகின்றது. இவ்வித நாகரீகச் சாதனங்களால் சென்ற மகாயுத்தத்தின்போது நிகழ்ந்த சர்வநாசச் செய்திகளை நன்கறியவேண்டுமாயின் ஜர்மனியர், பிரான்ஸியர், ஆங்கிலேயர் முதலியோர் மகாயுத்தம் முடிந்தபின் அதன் பயனாய் நேரிட்ட சர்வ நாசங்களைப்பற்றி வெளியிட்டுள்ள அறிக்கைகளைப் படிப்பதுகொண்டு நன்கு தெரிந்துகொள்ளலாம்.

சென்ற மகாயுத்தத்தில் பட்ட அவஸ்தைகளே போதுமானதாகும் என எல்லா மேனாட்டு வல்லரசர்களும் இனியும் அவ்விதக் கொடிய யுத்தங்கள் நடைபெறாமல் உலக க்ஷேமம் அடையக் கருதி, தம்தம் இராணுவ பலங்களையும், ஆயுதமுஸ்தீபுகளையும் குறைத்துக்கொள்ள வேண்டுமென்று சபைகள் கூடி, பேசி முடிவுசெய்து உடன்படிக்கையொன்று எழுதி கையெழுத்திட்டுக் கொண்டார்களெனினும், அந்நவநாகரிக யுத்தக்கருவிகளில் மனோவசியப்பட்டுப் போய்விட்ட அம்மேனாட்டு நாகரிக மக்கள் அதன்படி இன்னும் நடந்துகொண்டார்களல்லர்.

### நாகரிகக் கருவிகளால் நேர்ந்த பொருளாதாரக் கஷ்டம்.

இறுதியாய் கவனிக்கவேண்டிய விஷயம், தற்கால உலக விவகாரமனைத்தையும் சீர்குலையச் செய்துவிட்டிருப்பது பொருளாதாரக் கஷ்டமேயாகும். இது ஏற்பட்டதற்குரிய அசல் காரணம் நவநாகரிக சாதனங்களாகிய மெஷீன்களேயாகும். பல்லாயிரக் கூலிக்காரர்கள் செய்யவேண்டிய வேலைகளை இரண்டோர் மெஷீன்கள் சொற்பகாலத்தில் அவ்வேலையை மிக நேர்த்தியாகவும் சுலபமாகவும் செய்து முடித்துவிடுகின்றது. அவ்வித மெஷீன்கள் உற்பத்தியாவதற்கு முன்னர் ஒவ்வொரு காரியாலயங்களிலும், தொழிற் சாலைகளிலும் பல்லாயிரக் கணக்கான கூலிவேலைக்காரர்கள் இருந்து உழைத்துப் பிரயோஜனம் பெற்று ஜீவித்து வந்தார்கள். இக்காலை புதுப்புது மெஷீன்கள் வந்து வெகு சுலபத்தில் பல்லாயிர மனிதர்களால் செய்யக் கூடிய வேலைகளை சொற்பகாலத்திற்குள் செய்து முடிப்பதாகிவிடவே, அப்பல்லாயிரக் கூலிக்காரர்களும் வேலையில்லாதவர்களாயினர். இவ்வாறு நாடு எங்கும் வேலையில்லாமை ஏற்படவே ஜனங்களிடையே பண இருப்பும், பண வரவுசெலவும் மிகமிகக் குறைந்தொழிந்துப் போயிற்று. இதன் காரணமாக முதலாளிகளுக்கு வரும்



படியும் இல்லாதுபோயிற்று. ஏனெனின், மெஷின்களைக் கொண்டு தயார்செய்யப்படும் ஏராளமானப் பொருட்கள் விற்பனையாகாமல் விலைமலிந்து போனதால் சொல்லமுடியாத நஷ்டங்கள் ஏற்பட்டுப்போயின. அத்துடன் சகிக்கமுடியாத பணக்கஷ்டமும் ஏற்பட்டுவிட்டன. இதன் பயனாய் ஏற்பட்ட பொருளாதார நெருக்கடி அரசாங்க வியவகாரத்தையும் போய் பீடித்துக்கொண்டது.

பொருளாதாரக் கஷ்டத்துக்கு அரசாங்க இலாக்காக்காரர்களின் நடவடிக்கைகளும் ஒரு காரணமாகும். அரசாங்கத்தை நடத்திவரும் மேலதிகாரிகள் ஏழை எளிய ஜனங்களின் சங்கடங்களை உள்ளுணர்ந்துப் பார்ப்பவர்களல்லர். ஆனால் வரிவிதித்தக் கட்டணங்களை அவ்வேழை ஜனங்களாகிய பிரஜைகளிடமிருந்து வற்புறுத்தியேனும் வாங்கித் தீருவதில் பின்னடைபவர்களாயில்லை. அங்ஙனம் வரிவசூலித்து சுகமாய் காலங்கழிப்போர் மேஜையருகில் உட்கார்ந்து ருசியுடன் உண்பவர்களது நிலைமையில், ஏழை எளிய ஜனங்கள் அன்னோரது எச்சல்களை பொறுக்கி யுண்பவர்களுடைய ஸ்திதியிலும் இல்லாதிருக்கின்றனர் என்று கூறுவதுமிகையாகாது.

தவிர நவீன நாகரிகத்தின் பயனாய் உற்பத்தியான மெஷீன்களின் காரணமாய் ஒரு சாரார்மட்டும் பெரும் பணக்காரர்களாகவும் இதரர்களெல்லாம் மிக ஏழை தரித்திரர்களாகவுமாய் விட நேரிட்டுவிட்டது. ஏனெனின், மெஷீன்களுக்குரியவர்களா யிருப்பவர்கள் இலக்ஷக்கணக்கான ரூபாய்களுக்கு சொந்தக்காரராய் விடுகின்றனர். உலகத்தில் செலாவணியாகிக் கொண்டிருக்க வேண்டிய பெருந்திரவியம் மெஷீனிலும் மோட்டாரிலுமாய் ஒருசாராரிடம் போய் தடைப்பட்டிருந்துவிட்டால் உலகத்தில் பொருள் கஷ்டம் ஏற்படாமலாபோகும்?

ஆகையால் உலகமக்கள் எல்லோரின் குணஒழுக்கமும், ஆசாரமும், அமைதியின்மையும் மற்றுஞ் சங்கடங்களும் நீங்க வேண்டுமாயின், மேனாட்டார்களும் மற்றெல்லோரும் கீழ்நாட்டின் இணையில்லா நன்னாகரிக நல்லாசார வழியாகிய இஸ்லாமிய கட்டளையைப் பின்பற்றி நடத்தல் வேண்டும். இஸ்லாமிய சமத்துவத்தையும் போதனா முறைகளையும் பின்பற்றி நடத்தல் வேண்டும். இஸ்லாத்தின் போதனையில்தான் உலகமும் பிரஜைகளும், க்ஷேமமும் சுபீக்ஷயும் அடைவதற்குரிய வழி அமைந்திருக்கிறது. இதுவே உண்மை.

---

## இந்தியாவில் இஸ்லாத்தின் ஒளி!

### 13 நூற்றாண்டுகளாக நிகழ்வுற்ற சம்பவங்களின்மீது ஓர் கண்ணோட்டம்

ஹிஜ்ரீ முதல் நூற்றாண்டில் அரபியர்கள் ஸிந்தின்மீது படை எடுப்புச் செய்த காலம் முதற்கொண்டு இந்தியாவில் இஸ்லாம் பரவ ஆரம்பித்தது. ஆனால் அதற்குமுன் அரபிகள் மலைபார் துறைமுகத்திற்கு வந்திருந்தபோதிலும் அவர்கள் மிகச் சொற்பமானவர்களாதலின், அதனைக் கணக்கில் சேர்க்கப்படவில்லை. எனவே ஐந்தாவது நூற்றாண்டில் சுல்த்தான் மஹ்மூத் கஜ்னவீ அவர்கள், பஞ்சாப் முல்தான் ஆகிய இவ்விரு பிரதேசங்களையும் தங்கள் ஆட்சிக்குட்படுத்திக்கொள்ளவே, ஸிந்தின்மீது படையெடுத்திருந்த முஸ்லிம்கள் அதைவிட்டு வெளியில் வந்துவிட்டார்கள். ஆனால் சிலகொள்ளைக் கூட்டத்தினர் மட்டும் குஜ்ரத் பிரதேசத்திலிருந்துகொண்டு ஹிந்துக்களோடு சேர்ந்து விஷமத்தனம் புரிந்துகொண்டிருந்தார்கள். பின்னர் சுல்தான் அவர்கள் அத்தேசத்தின் மீதும் ஆதிக்கங்கொள்ளவே, விஷமிகளின் ஆர்ப்பாட்டங்கள் இந்தியாவிலில்லாதே ஒழிந்து போயிற்று.

அதுகாலை இந்தியாவில் இஸ்லாமியப் பிரசாரம் புரிந்தவர்கள், அப்பொழுதுதான் இஸ்லாத்தைப் பின்பற்றிய புதிய முஸ்லிம்களானதால் அதன் தத்துவங்களை நன்கு தெரிந்து கொள்ளாதவர்களாய் இருந்தார்கள். எனவே இஸ்லாமியப் பிரசாரம் தீபரமான முறையில் நடைபெறாது போயிற்று. இங்கிலை

மையில் சுல்தான் மஹ்மூத் அவர்கள் காலமாய்விடவே, உட்கலம் ஏற்பட்டுவிட்டதன் பயனாய் சிலகாலம் வரை பஞ்சாபைத் தவிர இதர இடங்களில் இஸ்லாம் பரவுவது தடையாகயிருந்ததுடன் இஸ்லாத்தைப் பிரசாரஞ் செய்யவேண்டுமென்னும் எண்ணங்கூட யாருக்கும் ஏற்படவில்லை. பின்னர் சுல்தான் மஸ்ஊத் அவர்களின் காலத்தில் ஹஜ்ரத் தாதாகன்ஜ்பக்ஸ் (ரஹ்.) என்னும் பெரியார் இந்தியாவிற்கு விஜயஞ்செய்து சில ஹிந்து குடும்பங்கள் இஸ்லாத்தைக்கொண்டு சிறப்புற்றுத் திகழும்படி செய்தார்கள். எனவே, இந்தியாவில் அப்கனியர்கள் மூலம் இஸ்லாமியப் பிரசாரம் பரவியதால் அவர்களின் மார்க்கக்கொள்கை நிர்ணயம் முதலியவைகளே இந்தியர்களிலும் காணப்பட்டது.

### படான்களின் ஆட்சிமுறை

ஹிஜ்ரீ 602-ம் ஆண்டில் குத்புத்தீன் யெபேக் தெஹ்லியின் சிம்மாசனத்தில் சிறப்புற்று விளங்குங்கால், அவர் பட்டாளத்திலும் மந்திரி பிரதானிகளிலும் தக்க முறையில் இஸ்லாமியப் பிரசாரம் செய்யக்கூடியவர்கள் மிக சொற்பமாகவே இருந்தார்கள். அதற்கு முன் ஹஸ்ரத் காஜா முயீனுத்தீன் அஜ்மீரீ அவர்கள், இந்தியாவிற்கு விஜயஞ்செய்ததன் பயனாய் அவர்கள்மூலம் பெரும்பாலோர் இஸ்லாத்தைத் தழுவி யிருந்தபோதிலும் அப்புதிய முஸ்லிம்களில் தக்க முறையாக இஸ்லாமிய்ப் பிரசாரஞ் செய்யக்கூடியவர்கள் காணப்படாதே இருந்தார்கள். காஜா அஜ்மீரீ (ரஹ்.) அவர்களுக்குப் பின் காஜா பக்தியார் காக்கீ, ஷேக் ஹமீதுத்தீன் நாகூரீ, ஷேக் ஜகரிய்யாமுல்தானீ, பாபா பரீத் பாக்பட்டி, பூஅலீகலந்தர், காஜா நிஜாமுத்தீன் அவ்லியா (ரஹிமஹுமுல்லாஹ்) போலொற்ற மாபெரும் மகான்கள் புதிய முஸ்லிம்களின் பக்கல் தங்கள் முழு கவனத்தையும் செலுத்தினார்கள். எனவே அம்மகான்கள் அப்புதிய முஸ்லிம்களுக்கு ஆத்ம சக்தியின் மகிமையை தக்க முறையில் கற்பித்துக் கொடுத்து மானிடர்களின் ஹிருதயங்களுக்கு, அல்லாஹ் அளவில் கொழுகுதல் ஏற்படும்படி செய்தார்கள். இதற்குமுன் அப்புதிய முஸ்லிம்களுக்கு புத்தரின் போதனைகள், பிராமணர்கள்மீது நம்பிக்கை கொள்ளவேண்டியதின் அவசியம், சன்னியாசம் பூண்டுகொள்வதின் மேன்மை ஆகியவைகள் நல்ல முறையில் கற்பித்துக் கொடுக்கப்பட்டு வந்தன. ஆனால் மேலே கூறப்பட்டுள்ள சங்கைவான்களான மகான்களின் பிரசாரத்தினால் அப்புதிய முஸ்லிம்களுக்குத் தக்க பிரயோசன மேற்பட்டு அவர்களின் எண்ணிக்கை நாளுக்குநாள் அதிகரித்துக்கொண்டே வந்தது.

### சுல்த்தான் அலாவுத்தீனின் ஆட்சி.

படான் அரசாக்ஷியில் உண்மை உலமாக்கள் சொற்பமாகக் காணப்பட்டார்களாதலின், அதுபொழுது இஸ்லாமியப் பிரசாரமும் சன்மார்க்க போதனையும் தக்க முறையில் நடைபெறாது வீழ்ச்சியடைந்திருந்தது. அதனால் குர்ஆன்ஷரீன் அறிவு, ஹதீதுகளைத் தெரிந்து கொள்வதுபோலொற்ற நற்கருமங்களுக்குத் தடை ஏற்பட்டுப் போயிருந்தது. சுல்த்தான் அலாவுத்தீன் அவர்களின் பிரக்யாதி உலகமுழுதும் விளங்கிக்கொண்டிருந்ததாகிலும், அவர்கள் மார்க்கக் கல்வியின் பரவுதலுக்காகவும், இஸ்லாமியப் பிரசாரத்தின் முன்னேற்றத்திற்காகவும் யாதொரு ஒழுங்கான திட்டத்தையும் சீர்படுத்தி வைத்தார்களில்லை. ஆனால் அவர்களின் ஆட்சியில் சதிபுரிவோர்களின் துர்ப்பிரசாரம் முன்னேற்றமடையாது தடைபட்டிருந்தது. அவ்வாக்ஷி முறையில் சன்மார்க்கம் இன்னதென அறியாதவர்கள்தான் சிப்பாய் உத்தியோகம் வகித்திருந்ததுடன் சில சுயநலவாதிகள்தான் முப்திகளாகயிருந்தார்கள். ஆகவே, அவர்கள் பாதுஷாவை தங்கள் நோக்கப்படி திருப்பிக்கொண்டிருந்தார்களாதலின் சன்மார்க்கத்தை போதிக்கும் உண்மை உலமாக்கள் பாதுஷாவின் சக்தியால் மிதிபட்டுப் போகக்கூடியவர்களா இருந்தார்கள்.

### சுல்த்தான் முஹம்மத் துக்லக்

ஹிஜ்ரீ 8-வது நூற்றாண்டில் முஹம்மது துக்லக் அரசர் சிம்மாசனம் வகித்தவுடன் அவர் சுயநலவாதிகளான முஸ்லிம்களையெல்லாம் உத்தியோகத்தினின்று விலக்கிவிட்டு உண்மையிலேயே குர்ஆன் ஹதீதுகளைப் பின்பற்றி நடக்கக்கூடிய உலமாக்களை உத்தியோகத்திலேற்படுத்த முயற்சித்தார். ஆனால் அவ்வாறான உலமாக்கள் அவருக்கு அகப்பட்டார்களில்லை. அதுபொழுது பிரக்யாதி பெற்ற பெரியாராகிய இப்னுபதூதா அவர்கள் பல தேசங்களையும் சுற்றிக்கொண்டு தெஹ்லி வந்து சேர்ந்தார்கள். சுல்த்தான், மகான் அவர்களின் திறமையைக்கண்டு வியப்படைந்து தெஹ்லியின் காஜியாக நியமித்து பலநாட்கள்வரை தன்னுடனே வைத்திருந்தார். இதனைக்கண்டு பளைய முப்திகளெல்லாம் பொருமைகொண்டு பலவாறான பித்னா பசாதுகளைக் கிளப்பிவிட்டு பாதுஷாவின் மக்களையும், கியாதி வாய்ந்த மந்திரிகளையும் கொலைசெய்து மகான் அவர்களின் பிரசாரத்தை அடக்கப் பிரயத்தனப்பட்டார்கள். ஆனால் அதுபொழுது சுல்த்தானின் பிரசாரம் உண்மையானதாகயிருந்ததால் யாராலும்அதனைக்கெடுத்துவிட முடியாது போயிற்று.

இதே நூற்றாண்டில் சுல்த்தான் மஹ்மூத் ஷாஹ்பஹ்மனீ அவர்கள், தக்கனில் குர்ஆன் ஹதீதுகளைப் பிரசாரஞ்செய்ய அளவற்ற பிரயத்தனஞ் செய்தார்கள். இதுவன்றி குஜ்ரத்தில் சுல்த்தான் மஹ்மூத் அவர்கள் சன்மார்க்கத்தைப் பின்பற்றி நடந்துவந்த தன் பயனாக, அரப் தேசத்திலிருந்து மௌலானா வஜீஹுத்தீன் அவர்கள் அங்கு அழைக்கப்பட்டார்கள். சுல்த்தான் அவர்கள், அம்மகானுக்கு பெரிதும் மரியாதை செய்தார்கள். மௌலானா அவர்கள் சன்மார்க்கப் பரவுதலுக்காகவும் முஸ்லிம்களைச் சீர்திருத்துவதற்காகவும் பெரும் முயற்சி செய்து அச்சேவையில் பெரும் வெற்றியும் பெற்று விளங்கினார்கள்.

### கபீர், நானக்கின் காலம்

9, 10-வது நூற்றாண்டில் கபீர் நானக் இவ்விருவர்களும் ஜனனமானார்கள். அன்னோர் ஹிந்து, முஸ்லிம் இருசாரார்களும் ஒரேவிதமான நடைமுறையைப் பின்பற்றி நடக்கக் கூடியவர்களா யிருக்கவேண்டுமென அபாரப் பிரயத்தனமெடுத்தனர். அக்காலை உண்மையிலேயே சன்மார்க்கத்தைத் தேடி அதனைப் பின்பற்றுபவர்கள் மிகச் சொற்பமாக இருந்ததுடன் யாரும் இஸ்லாத்தை ஒரு பொருட்டாகக் கருதாதவர்களாயுமிருந்தார்கள். தவிர துர்அதிர்ஷ்டவசமாய் முஸ்லிம்களிற் சிலர் அவ்விருவர்களின் கொள்கைகளை மக்களிடையே பிரசாரஞ் செய்வதற்கும் முற்பட்டுவிட்டனர்.





### சையித் முஹம்மத் ஜௌன்பூரி

இவ்வாறு முஸ்லிம்கள் பெரும் வெள்ளத்தில் சிக்குண்டு விழித்துக்கொண்டிருங்கால் ஜௌன்பூருலிருந்து ஹஸ்ரத் சையித் முஹம்மத் (ரஹ்) அவர்கள், தாங்கள் குர்ஆன் ஹதீதுகளின்படி அமல்செய்வதுடன் அதனைப் பிரசாரஞ்செய்வதற்காகவும் முற்பட்டு வந்தார்கள். அவர்களைப் பின்பற்றியவர்கள் யாவரும் குர்ஆன் ஹதீதுகளின்படியே நடக்கிறவர்களாக இருந்தார்கள். எனவே மகான் அவர்கள், ஜௌன்பூரிலிருந்து ரஜபுத்தானா குஜ்ரத் தக்கன்வரை சன்மார்க்கத்தைப் பரத்திவைத்தார்கள். அதன்பின் கந்தஹார் சென்று 'பராஹ்' என்னுமிடத்தில் தெய்வகதி அடைந்தார்கள். பின்னர் அம்மகானவர்களின் பிரதான சிஷ்யராகிய ஷேக் அலாய் அவர்கள், பெரும் ஊக்கத்தோடு அச்சேவையிலீடுபட்டு இஸ்லாமியத் தொண்டுபுரிய முற்பட்டார்கள். இந்நிலைமையில் சில சுயநலமிகள் அவர்களுக்குத் தொந்திரவுகொடுக்க முற்பட்டு அவர்களைக் கொன்றும்விட்டார்கள்.

### முகல் ஆட்சியும் இஸ்லாமும்.

பாபர், ஹுமாயூன் இவ்விருவரும் துருக்கிஸ்தானின் தண்ணீர் காற்றில் வளர்ந்தவர்களாதலின், அங்கு துர்ப்பிரசாரஞ்செய்வோர், சதிபுரிவோரின். பலங்குறைந்து போயிருந்தது. எனவே அவர்களின் ஆக்ஷி காலத்தில் சதிபுரிவோர்கள் முன்னேற்றமடைய முடியாதுபோயிருந்தது. ஆனால் ஹுமாயூன், ஷேர்ஷாஹ் இடத்தில் தோல்வியுற்று ஈரான் சென்றவுடன் ஷீஆ வகுப்பைப் பின்பற்றமுற்பட்டார். பிறகு அவர் ஈரானிலிருந்து இந்தியாவுக்குத் திரும்பிவரும் போது ஷீஆ வகுப்பாரின் தலைவர்களும் அமீர்களும் அவருடனிருந்தார்சள். எனவே, இந்தியாவில் முதன்முதல் ஹுமாயூனின் காலத்தில்தான் ஷீஆக் கொள்கை பலமாகப் பரவ ஆரம்பித்தது. பின்னர் அக்பர் சிம்மாசனம் வகித்தபிறகுங் கூட, ஷீஆ அதிகாரிகளின் ஆர்ப்பாட்டம் அதிகரித்திருந்தது.

ஹிஜ்ரீ 10-வது நூற்றாண்டில் டக்காவில் ஷாஹ்தாஹிர் இஸ்மாயீலீ அவர்கள், சுல்த்தான்கள் தங்கள் வழியைப் பின்பற்றி நடக்கும்படி செய்வதற்குப் பிரயத்தனப்பட்டார்

கள். ஆனால் சுல்த்தான்கள் வழிகெட்டவர்களுடன் அந்தரங்கத்தில் சம்மந்தம் வைத்திருந்ததால், சுல்த்தான்களிடம் காணப்பட்ட ஷீஆக் கொள்கையை அகற்ற முடியாது போயிற்று. பின்னர் பிஜாபூர் அரசர், அஹமத்நகர் அரசர் இவர்களெல்லாம் அக்கொள்கைகளைத் தழுவியதால், டக்காவில் நல்லவிதமாகப் பரவிப்போயிற்று. எனவே ரோஹல்கண்டு என்னுமூர், ஷீஆக்களுக்கும் சுன்னி வகுப்பாருக்கும் யுத்தம் நடக்கும் பெரும் போர்க்களமாக ஏற்பட்டுப்போயிற்று.

## அக்பரின் புதிய மார்க்கம்.

அக்பரின் ஆட்சிகாலத்தில் இஸ்லாத்தின் நிலைமை ரொம்ப மோசமாக யிருந்தது. பாதுஷாவே அறியாமை குடிகொண்டவராக யிருந்ததால், அவருடன் சேர்ந்திருந்தவர்களின் சகவாசத்தால் நிலைமை முழுதும் மோசமாய்ப்போயிற்று. இந்நிலையில் அக்பரானவர் கிறிஸ்தவப்பாதிரிகளையும், எஹூதிகளின் பெரியார்களையும், மஜூஸிகளிலுள்ள ஆலிம்களையும், இந்துப் பண்டிதர்களையும், முஸ்லிம் உலமாக்களையும் ஒரு இடத்தில் சேகரித்து ஒவ்வொரு மார்க்கத்திலுமுள்ள சற்குணங்களை எல்லாம் ஒன்று திரட்டி ஒரு புதிய மார்க்கத்திற்கு அஸ்திவாரமிடச் செய்தார். சில வழிகேடர்கள் இதனைப் பலப்படுத்தவும் முற்பட்டார்கள். ஆனால் அல்லாஹ்தஆலாவுக்கு திருப்தி இல்லாததால் அக்பருடனேயே அம்மார்க்கமும் புதைக்கப்பட்டுப் போயிற்று.

## ஜஹான்கீரும் ஷேக் அஹ்மதும்.

11-ம் நூற்றாண்டுவரை பொதுவாக இந்திய முஸ்லிம்களிடையே அறியாமையும் குபிர் என்னும் இருளும் பரவிப்போயிருந்தது. இக்காலை ஹஸ்ரத் ஷேக் அஹமத்ஸர்ஹிந்தி (ரஹ்) அவர்கள் குர்ஆன் ஹதீதுகளை தக்க முறையில் பிரசாரஞ்செய்ததுடன் 'தசவ்வுப்' பாரமார்தீகம் என்னும் கல்வியையும் தக்க முறையில் வெளிப்படுத்திக் காண்பித்தார்கள். ஹஸ்ரத் அவர்களின் இப்பிரசாரத்தின் பயனானது ஷாஹ்ஜஹானிடம் கூட எதிர்ப்புப் புரியும்படி செய்துவிட்டது. அதனால் ஹஸ்ரத் அவர்கள் கைது செய்யப்பட்டு குவாலியர் கோட்டையில் சிறைவைக்கப்பட்டிருந்தார்கள். இச்சம்பவத்தால் ஹஸ்ரத் அவர்களின் பிரசாரம் முன்னைவிட பதிமடங்கு பிரகாசிக்க ஆரம்பித்தது. இதே காலத்தில்தான் ஹஸ்ரத் ஷேக் அப்துல் ஹக்முஹத்திஸ் தெஹ்லவீ (ரஹ்) அவர்கள் ஜனனமானார்கள். அம்மகானவர்கள் தக்க முறையில் குர்ஆன் ஹதீதுகளைப் பிரசாரம் புரிந்ததன் பயனாக மறுபடியும் முஸ்லிம்களின் வதனங்களில் இஸ்லாம் பிரகாசிக்க ஆரம்பித்தது.

## ஆலம்கீரின் நன்முயற்சி

11-ம் நூற்றாண்டின் கடைசியில் இவர் தாராஷகூவை தூக்கிலேற்றிவிட்டு, டக்காவிலுள்ள ஷீஆக் கொள்கையையும் அழித்து நாசப்படுத்தியதுடன் குர்ஆன் ஹதீகளையும் தக்கமுறையில் பிரசாரஞ் செய்வதற்காக முற்பட்டார். அதுகாலை இயற்றப்பெற்ற 'பத்தாவா ஆலம்கீரி' என்னும் கிரந்தந்தான் இது பொழுதும் மிக்க பிரக்யாதியோடு விளங்கி வருகிறது. ஆனால் மகான் அவர்களின் மரணத்திற்குப் பின் மறுபடியும் வழிகேடுதலைவிறித்தாட ஆரம்பித்தது.

## ஷாஹ்வலியுல்லா (ரஹ்)

12-ம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் உலகினை வழிகேடர்களின் வழிகேட்டை விட்டுக்காப்பாற்றுவதற்காக சில மகான்களை அல்லாஹ் உண்டு பண்ணினான். ஹஸ்ரத் ஷாஹ்வலியுல்லாஹ் முஹத்திஸ் தெஹ்லவீ அவர்கள் அம்மகான் களின் தலைவராகும். எனவே, தாங்கள் தக்க முறையில் பிரசாரஞ் செய்ய முற்பட்டார்கள். அதற்காக அனேக கிரந்தங்களையும் இயற்றினார்கள். ஆனால் பகைவர்கள், விரோதஞ்செய்ய முற்படவே, ஷாஹ் சாஹிப் அவர்கள் இந்தியாவை விட்டுக் கிளம்பி இரண்டு வருடம் வரை மக்கமாநகர்லிருந்துவிட்டு தேசம் மாறுதலடைந்த பின் திரும்ப வந்து குர் ஆன் ஹதீதுகளின் பிரசாரத்தை தக்கமுறையில் வெளியிட ஆரம்பித்தார்கள்.

## உண்மை உலமாக்களின் சேவை

அதுகாலை முஸ்லிம்களின் ஆக்ஷிமுறை ஒன்றன்பின் ஒன்றாய் அழிந்து நாசமாய்ப் போய்க்கொண்டும், ஐரோப்பியர் ஸீக்கியரின் பாதத்திற்குத் தாளால் மிதிபட்டுப் போய்க்கொண்டுமிருந்ததால், இஸ்லாமிய மார்க்கமும் சிதறடிக்கப்பட்டதாக ஆய்விட்டது. அதனால், அறியாமை குபிர் என்னும் இருள் குறைந்துகொண்டு வருவதற்கு பதிலாக அதிகரித்துக்கொண்டே பரவி வந்தது. அதுகாலை 12-ம் நூற்றாண்டில் ஷாஹ் ரபீஉத்தீன், ஷாஹ் அப்துல் அஜீஜ் (ரஹிமஹுமுல்லாஹ்) போலொற்ற உண்மை உலமாக்கள் தோன்றி தக்கமுறையில் இஸ்லாத்தைப் பரத்த பிரயத்தனப்பட்டார்கள். அதேகாலத்தில்தான் பஞ்சாபில் சீக்கியர், முஸ்லிம்கள்மீது அநீதிபுரிய முற்பட்டார்கள். ஆனால் அவர்களின் அக்கிரமங்களை எதிர்க்க அக்காலை எந்த இஸ்லாமிய சக்தியும் கிடையாது. கடைசியில் ஹஸ்ரத் சையித் அஹ்மத்பரேலி, மௌலானா முஹம்மத் இஸ்மாயீல் ஷஹீத் இவர்கள் தங்களைப் பின்பற்றியவர்களையும் சேர்த்துக்கொண்டு யுத்தம்புரிந்ததுடன் ஷிர்க், பித்அத், அனியாயம் அதிக்கிரமம் முதலியவைகளை அகற்றுவதற்கும் அளவற்ற பிரயத்தனஞ்செய்தார்கள். அம்மகான்களின் பிரயத்தனம் உண்மையானதாக யிருந்ததால் எவ்வித எதிர்ப்புக்கும் தடைபட்டுப் போகாது இந்திய முஸ்லிம்களுக்கிடையே புதியதோர் உணர்ச்சியை உண்டுபண்ணி விட்டது. எனவே குர்ஆன் ஹதீன் பிரசாரம் தக்க முறையில் பிரகாசிக்க முற்பட்டுப்போயிற்று

## இஸ்லாமும் ஐரோப்பிய ஆக்ஷியும்.

13-ம் நூற்றாண்டின் கடைசியில் தேசத்தில் ஐரோப்பிய ஆக்ஷியின் அதிகாரம் செல்மதிக்கு வந்தது. ஆனால் அவ்வரசாக்ஷியின் நோக்மானது ஆரம்பமுதல் மார்க்க சம்பந்தத்தில் தலையிடுவதில்லை என்றும், எம்மனிதனையும் தன்கொள்கைவிட்டுத் திரும்புவதற்கு வற்புறுத்தப்பட மாட்டானென்பதிலுமேயிருந்தது. ஆனால் இவ்விடத்தில் நாம் அதுவிஷயத்தைப்பற்றி தர்க்கஞ்செய்யாது இக்காலையுள்ள முஸ்லிம்களின் நிலைமையைக் கவனிக்கவேண்டி இருப்பதால், அதனைவிட்டு இதன்பக்கமே நமது கவனத்தைச் செலுத்துவாம்,

வடஇந்தியாவிலுள்ள பஞ்சாபை ஸீக்கியர்களுக்குப் • பின் ஐரோப்பியர் கைப்பற்றினார்களாதலின், அதுபொழுது முஸ்லிம்கள் அடிமைவாழ்க்கை நடத்திக்கொண்டிருந்தார்கள். உடனே பங்கால் பிஹார் இவைகளையும் ஐரோப்பியர்கள், தங்கள் கைவசப்படுத்திக் கொண்டார்கள். ஹைதராபாத்தின் நிர்வாகம் பலம் குன்றியதாக யிருந்து அவர்கள் ஐரோப்பியர்களின் உதவியை எதிர்பார்த்து வாழ்க்கை நடத்திக்கொண்டிருந்தார்கள்; மைசூரில் டிப்பு சுல்த்தான் குடும்பத்தார்கள் சிறைவைக்கப்பட்டவர்களே போன்று இருந்தார்கள். இவ்வாறான மிடுக்கு நிலைமை ஏற்பட்ட சந்தர்ப்பத்தில், கதரின் தீ சுடர் விட்டெறிய ஆரம்பித்தன் பயனாக முஸ்லிம்களுக்கிருந்த அற்ப சொற்ப அதிகாரமும் பாழடைந்து போயிற்று. எனவே முகல் வம்சத்தார்களில் கடைசியானவர் கைதுசெய்யப்பட்டு ரங்கூன் கொண்டுபோகப்பட்டார்; ஊதின் நவாப் கல்கத்தாவில் கைதுசெய்யப்பட்டார்; முஸ்லிம்களில் நூற்றுக்கணக்கான வீட்டுக்காரர்களும் ஆயிரக்கணக்கான குடும்பஸ்தர்களும் அழித்து நாசமாக்கப்பட்டார்கள். அதனால் ஆங்கிலக் கல்வி பயில்வது கூடாதெனக் கூறியதின் பயனாக ஹிந்துக்கள் அக்கல்வியை பயின்று இராஜாங்கத்தில் அநேக உயர் உத்தியோகங்கள் வகிக்க முற்பட்டார்கள்.

## உண்மை உலமாக்களைச் சிறைசெய்தது

கதர்க்குப்பின் ஐரோப்பிய ஆக்ஷியானது, உண்மை உலமாக்களை எல்லாம் சிறைசெய்ய முற்பட்டது. அதுகாலை ஹஸ்ரத் சையித் பரேலீ அவர்களின் சிஷ்யர்களிற் சிலர் எல்லைப்புறத்தைக்கடந்து வெளியில்சென்று வசித்துக்கொண்டிருந்தார்களாதலின், அன்னோருக்கு உதவி செய்கிறார்களென்னும் காரணத்தைப் புகலாகக்கொண்டு இந்தியாவின்கண் வதிந்துவந்த அனேக உலமாக்கள் சிறையில் வைக்கப்பட்டும் அநேகர் தூக்கிலிடப்பட்டும் அனேகர் தேசபிரிஷ்டம் செய்யப்பட்டும் போனார்கள்.

## ஸர்சையித்

முஸ்லிம்கள் மேல்நாட்டுக் கல்வியின்மீது வெறுப்புக்கொண்டிருந்தார்களாதலின், இதனைக்கண்ட ஸர் சையிதானவர் ஆங்கிலக்கல்வியின் அவசியத்தை உணர்ந்து கி. பி. 1877-ல் அலிகாரில் ஒரு கலாசாலையை ஸ்தாபிதஞ் செய்தார். ஷிப்லீ, ஹாலீ, முஹ்ஸினுல்முலுக், டாக்டர் நதீர் அஹ்மத் முதலிய மேதாவிகளும் அவருக்கு உதவிபுரிந்தார்கள் அதன் பின் 1886-ம் ஆன்

டில் முஸ்லிம் எஜுகேஷனல் கான்பரன்ஸும் ஆரம்பிக்கப்பட்டு ஒவ்வொரு ஆண்டிலும் இந்தியாவின் ஒவ்வொரு பிரதான நகரங்களில் அதன் கூட்டம் நடைபெற்றும் வருகிறது. அக்காலேஜ்தான் இதுகாலை முஸ்லிம் யூனிவர்ஸிட்டி என்னும் பெயருடன் வழங்கி வருகின்றது.

### லாமத்ஹபும் நத்வத்துல் உலமாவும்.

அதுகாலை முஸ்லிம்கள் மார்க்கக் கல்வியை தக்க முறையில் கற்காதிருக்கும் நிலைமையில் அவர்களின் சந்ததிகள் ஆங்கிலக் கல்வியைக் கற்க முற்படவே, அச்சந்ததிகள் சன்மார்க்கத்தைத் தெரிந்துகொள்ளாததால் 'லாமத்ஹபி'க் கொள்கை தக்கமுறையில் பரவ ஆரம்பித்தது; குர்ஆன் ஹதீதுகளின் கருத்துக்களில் மாற்றமும், அகாரணமாய் குயுக்தியான கருத்துக்களும் அமைக்கப்படுவதற்குள்ள சந்தர்ப்பம் ஏற்பட்டும் போயிற்று. தவிர ஆங்கிலயக் கல்வியைக் கற்றோர்களிற் சிலர், அக்கல்வியின்மீதுகொண்டுள்ள மோகத்தால், மேனாட்டின் ஒவ்வொரு நடவடிக்கைகளும் குர்ஆன் ஹதீதுக்கு நேர்பாடானதாகயிருக்கிறதென்று கருத்தமைக்கவும் முற்பட்டனர். எனவே சன்மார்க்கமும் மார்க்க அனுஷ்டானங்களும் சீர்குலைந்து போவதற்குள்ள அடையாளங்கள் தோன்றின. அதுகாலை அல்லாமாஷிப்லீ அவர்கள், ஆங்கிலக் கல்வி பயின்று வரும் முஸ்லிம் இளவாலிபர்களின் விபரீதப் போக்கையும் உலமாக்கள் ஒதுங்கி நிற்பதையுங் கண்டு மனம் சகியாதவர்களாய் மௌலானா ஹாஜீ இம்தாதுல்லா சாஹிப் முஹாஜிரமக்கீ, மௌலானா பஜ்லுற்றஹ்மான் சாஹிப் போலொற்ற மகான்களின் ஆதரணையில் 'நத்வத்துல் உலமா' என்னும் பெயருடைய ஒரு சபையை அமைத்தார்கள். அச் சபையின்மூலம் அநேக கிரந்தங்கள் இயற்றப்பெற்றதுடன் முஸ்லிம் மாணவர்களின் மனதில் தோன்றும் சந்தேகங்களை அகற்றுவதற்கு அநேக மாசிகை சஞ்சிகைகளும் வெளியிடப்பட்டது. எனவே, அக் கலாசாலையின் கல்வித் திட்டத்தில் மார்க்க சம்பந்தமான கல்வியுடன் ஆங்கிலம், சரித்திரம், விஞ்ஞானம் முதலிய கல்விகளும் சேர்க்கப்பட்டு அதில் கற்றுத்தேரும் மௌலவீகள் புதிது புதிதாக எழும் தர்க்கங்களுக்கெல்லாம் தக்கமுறையில் விடை அளிப்பதற்கான தக்க வசதியும் அளிக்கப்பட்டது.

### முஸ்லிம் லீக்

இவ்வாறு கல்வி பயின்று வருவதற்கிடையே முஸ்லிம்களுக்கு ராஜிய விஷயங்களிலும் பற்றேர்ப்பட்டது. எனவே அவர்கள் கி. பி. 1906-ம் ஆண்டில் 'முஸ்லிம் லீக்' என்று ஒரு சபையை அமைத்தார்கள். முஸ்லிம்களுக்கு இராஜீய விஷயங்களைத் தெரியப்படுத்த வேண்டுமென்பதும், கவர்ன்மெண்டாரிடமிருந்து நமது உரிமைகளை அடையவேண்டுமென்பதும், நமது தேசத்தில் வதியும் முஸ்லிம் அல்லாதார்களுக்கு ராஜீய விஷயங்களில் எவ்வகையிலும் பின்னடையாதிருக்க வேண்டுமென்பதும், இராஜீய பரிபாலனத்தில் போதிய அளவு முஸ்லிம்களின் பிரதிநிதிகள் ஸ்தானம் வகிக்கவேண்டுமென்பதும் இச்சபையின் நோக்கங்களாகும். இதுகாலையும் இம்முஸ்லிம் லீக் இருந்து வருகின்றது; எவ்வொரு ஆண்டிலும் ஒவ்வொரு இடத்தில் வருஷக் கூட்டமும் நடைபெறுகின்றது. ஆனால் இது இருப்பதும் இல்லாதிருப்பதும் ஒன்றுதான். எனவே முஸ்லிம்களில் பெரும்பான்மையோர் இதன் செய்முறைகளைக் கண்டு திருப்தி அடையாதவர்களாகவே யிருக்கின்றார்கள்

### சையித் ஜமாலுத்தீனின் ஒற்றுமைமுயற்சி

உலக முஸ்லிம்களனைவர்களையும் ஒரு நிலைமைக்குக் கொண்டுவந்து அவர்களை பலம் பொருந்திய ஒரு சமுகமாகச்செய்துவிட வேண்டுமென்று சையித் ஜமாலுத்தீன் அப்கனீ மர்ஹூம் அவர்கள் ஒரு இயக்கத்தை ஆரம்பித்தார்கள். இந்தியாவிலுள்ள முஸ்லிம்களிலனேகர் இவ்வியக்கத்தை ஆதரித்து அதற்கு ஆதரவும் கொடுத்தார்கள். மௌலானா ஷௌகத்அலீ, மௌலானா முஹம்மத் அலீ, மௌலானா ஜபர் அலீகான், மௌலானா மஹ்மூதுல் ஹஸன்சாஹிப், மௌலானா அபுல்கலாம் ஆஜாத் முதலிய தலைவர்கள் மிக்க ஊக்கத்தோடு அச்சேவையிலீடுபட்டார்கள். ஆனால் கவர்ன்மெண்டார் இவ்வியக்கம் முன்னேற்றமடையாது தடை செய்துவிட்டார்கள்.

### காதியானிக்கொள்கை.

18-ம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் ஆப்ரிக்காவைப்பேரல் பாஞ்சாலத்திலும் மிர்ஸா குலாம் அஹ்மத்காதியானீ என்பார், தான் மஹ்தியாக யிருக்குமென்று கூறமுற்பட்டார். அவரும் அவரைப் பின்பற்றியவர்களும் குர்ஆன் ஹதீதுகளுக்கு அனேக மாற்றமான பிரயோசனமற்ற கருத்துகள் அமைத்து அவருடைய தாவாக்களுக்கு ஆதாரம் காட்டவும் முற்பட்டார்கள். இவ்வாறு மிர்ஸா பலவாறானமார்க்க முரணான விஷயங்களை மக்களிடையே கூறிக்கொண்டிருந்துவிட்டு காலஞ்சென்று விட்டார். அவருடைய மரணத்திற்குப்பின் அவரைப் பின்பற்றியவர்கள் இருவகுப்பாகப் பிரிந்துவிட்டார்கள். ஒருசாரார் மிர்ஸாவின் குமாரரான மிர்ஸா பஷிருத்தீனைப் பின்பற்றி நடந்துவருவதால், அன்னோர் காதியானீகள் என்று அழைக்கப்படுகின்றார்கள். மற்றோர் சாரார் முஹம்மத் அலீயின் தலைமையின் கீழிருந்து வருவதால், அன்னோர் லாகூர் பார்ட்டி என்றழைக்கப்படுகின்றார்கள். காதியானீ வகுப்பார் மிர்ஸாவை, நபீ என்றும் அவரை நபீ என ஒப்புக்கொள்ளாதவர்கள் முஸ்லிம்களல்லவென்றும் உறுதிகொண்டிருக்கின்றனர். லாகூர் பார்ட்டியார், மிர்ஸாவை 14-ம் நூற்றாண்டின் சீர்திருத்தக்காரரென்று ஒப்புக்கொள்கின்றனர். இவர்கள் தேவையில்லாதமுறையில் மார்க்கக்கொள்கைகளைப் புறட்டித்திரித்து மேனாட்டாருக்குக் காண்பிக்கின்றார்கள். சுருங்கக்கூறின் அஹ்மதிய ஜமாஅத்தார்கள் இஸ்லாத்தின் ஒவ்வொரு அனுஷ்டானங்களையும் புத்தியைக்கொண்டு ஆராயவேண்டுமெனக் கூறி வருகின்றார்கள்.

(தொடரும்.)

---



## அறிவாளியான வர்த்தகர்.

பத்தஹ்பூர் ஜில்லாவில், முஸ்லிம் அரசர்களின் காலமுதற்கொண்டு சரித்திர சம்பந்தமான சிறியதோர் கிராமம் 'ஜஹான் ஆபாத்' என்னும் பெயருடன் விளங்கி வருகிறது. அக்கிராமம் அக்பரின் காலமுதல் ஆலம்கீர் பாதுஷாவின் காலம்வரை முஸ்லிம் கவர்னர் ஜனரல்களின் வாசஸ்தலமாகயிருந்து வந்தது. இப்பொழுதோவெனில், பாழடைந்த ஊர்களைப் போன்று, எங்கு பார்த்தாலும் இடிந்துபோன பழைய கட்டிடங்களின் தோற்றங்களே தென்பட்டுக்கொண்டிருக்கின்றது. இச் சிற்றூரில் இற்றைக்குச் சுமார் 45-ஆண்டுகளுக்குமுன் ஓர் அறிவாளியான லேவாதேவிசெய்யும் புத்திலால்சேட் என்னும் பெயருடைய வியாபாரி ஒருவரிருந்தார். அவரது சொத்து சுதந்தரங்களையும், காணி பூமிகளையும் ஒழுங்கானமுறையில் பாதுகாத்து பரிபாலனஞ்செய்து வருவதற்காக, மீர் சையித் அக்பர் அலீ என்பவரைத் தலைவராக நியமித்திருந்தார். புத்திலால் என்பவர் அத்தலைவர்மீது மிக்க நம்பிக்கைக் கொண்டு முழு அன்புடனிருந்ததைக் கண்ட சேட்ஜீயின் உற்றார் உறவினர்களெல்லாம் பொறாமைகொண்டு அவர்மீது பொல்லாங்கு கூற முற்பட்டார்கள். அதற்கு புத்திலால் என்பார், மீர் சாஹிபின் சந்ததிகளுக்குங்கூட அவ்வுத்தியோகம் அளிப்பேன், அவர்கள்மீது எனக்கு தக்க நம்பிக்கையிருக்கிறதெனத் தெரிவித்துவிட்டார்.

புத்திலாலிடம் மிதமான் ஐசுவரியங்களிருந்ததால், அவர் ஒவ்வொரு ஆண்டிலும் ஜனங்களுக்கு பல ஆயிர ரூபாய்களை கடனாகக்கொடுத்து உபகாரம் புரிந்து வந்தார். ஆனால் அவ்வாறு கடன் கொடுப்பது வியாபாரம், கைத்தொழில், வெள்ளாமை முதலிய தொழில்கள் புரிவதற்கேயாம். இதுவன்றி, கல்யாணம், வீடுகட்டுவது முதலிய செலவினங்களுக்காக ஒருக்காலும் கடன் கொடுக்கவே மாட்டார். எனவே அவருடைய ஐசுவரியங்களின் உதவியால் எத்தனையோ நூற்றுக்கணக்கான வேலையற்றவர்கள் தொழில் முறையி லீடுபட்டு அபரிமிதமான ஐசுவரியங்களைச் சம்பாதித்யஞ்செய்து வாங்கின கடனைத் திருப்பிக் கொடுத்துவிட்டு மீதத்தை வைத்து சுகஜீவியாக காலங்கழித்து வருகின்றார்கள். ஒவ்வொருநாளும் அதிகாலையில் கடன் கேழ்ப்பதற்காக 40, 50-பேர் அவருடைய வீட்டு வாசற்படியண்டை வந்து

சேர்ந்துவிடுவர். இது விஷயம் அவருக்குத் தெரிந்தவுடன் கதவைத் திறந்துகொண்டு வெளியில் வந்து ஒவ்வொருவர்களையும் கூப்பிட்டு எவ்வளவுதொகை தேவை? எதற்காக ரூபாய்? என்று கேட்பார். அவர்கள் கூறும் பதிலை சேட்ஜீ கவனத்துடன் கேட்டுவிட்டு, இதுசமயம் ரூபாய்க்குப் பெரும் முடையாகயிருக்கிறதென்றும், ரூபாய்கள் கைக்கு வந்தவுடன் தங்களை ஞாபிக்கப்படுமென்றும் சொல்லி அவர்களி லனேகரை திரும்ப அனுப்பிவிடுவார். அவர்கள் சென்றபின் மீதமுள்ளவர்களுக்குக் கடன் கொடுப்பதாக வாக்களித்து அங்கு நிப்பாட்டிக்கொண்டு, நீங்கள் யாவரும் என்னிடம் காலைபோஜன மருந்துங்கள், அதற்குப்பின் உங்களில் யார் யாருக்கு எவ்வளவு கடன்கொடுக்க முடியுமென்பதை தெரிவிக்கிறேன் என்று கூறுவார். இதனைக்கேட்டு சிலர், நாங்கள் காலை போஜன மருந்திவிட்டு வந்திருக்கிறோமென்று கூறுவர். சேட்ஜீ இதனைக்கேட்டு திரும்பவும் ரொம்ப வற்புறுத்தி, "எவர், என் விருந்தை ஒப்புக்கொள்ள வில்லையோ அவரிடம் நான் கொடுக்கல் வாங்கல் செய்வதில்லை என பிரதிக்ஞை செய்துகொண்டிருக்கிறேன்' என்று கூறியவுடன் அங்கு வந்திருப்பவர்கள் யாவரும் சேட்ஜீயின் விருந்தை ஒப்புக்கொள்வர். அதுபொழுது சேட்ஜீ இவர்களைநோக்கி, கடைவீதியிலிருக்கும் எல்லாக் கடைக்காரர்க்ளுக்கும், என் விருந்தினர்கள் கேட்கும் சகல வஸ்துக்களையும் தடையின்றி கொடுக்கும்படி கட்டளையிட்டிருக்கின்றேன் ஆதலின் நீங்கள் கடைத்தெருவிற்குச்சென்று உங்களுக்கு விருப்பமானவைகளைச் சாப்பிட்டு வாருங்கள் எனக் கூறுவார். அக்கடைதெருவில் பலவாறான ருசிகரமான பதார்த்தங்களும் சாமான்யமானவைகளும் இருக்கக்கூடிய பற்பல கடைகளுமிருந்தன. எனவே கடன்வாங்குவதற்காக அங்கு தாமதித்திருக்கும் யாவரும் அவ்விடஞ்சென்று போஜனம் சாப்பிட்டு பானமருந்தி கடன் வாங்கிச் செல்வதற்காக சேட்ஜியின் இருப்பிடம் வந்து சேருவார்கள். உடனே சேட்ஜீ ஆள் அனுப்பி எல்லாக் கடைகாரர்களிடமும் கணக்கு வாங்கி வரும்படி செய்து, யார் யார் என்ன செலவு செய்திருக்கின்றார்கள்; என்னென்ன வகையான பதார்த்தங்கள் சாப்பிட்டிருக்கின்றார்களென்று பார்த்துக்கொண்டவுடன் அவர்களி லனேகரை அழைத்து இது சமயம் போதிய அளவு கைவசம் ரூபாய் கிடையாது; பின்னால் கவனிக்கப்படுமென்று கூறி அவர்களை அனுப்பிவிடுவார். அவர்கள் சென்றபின் சிலர்தான் எஞ்சியிருப்பர். உடனே சேட்ஜீ அவர்களிடமிருந்து கடன் சீட்டுகளை எழுதிக்கொண்டு ரூபாய் கொடுத்துவிடுவார். மேலும் அவர்களிற் சிலரை வற்புறுத்தி அதிகமாகக் கடன் பெற்றுக்கொள்ளும்படியும் கூறுவார். அதாவது, ஒருவன் வியாபாரத்திற்காக 100 ரூபாய் கடன் கேழ்ப்பானாகில், 100, 200 ரூபாயை வாங்கிச் சென்று என்ன செய்வாய்? எனக்கூறி குறைந்தபக்ஷம் 500 ரூபாயாகிலும் வாங்கிக் கொள்ளும்படி செய்வார்.

புத்தாலால் சேட்ஜீ, 26-ஆண்டுகள் வரை இவ்வாறே செய்து பல இலக்ஷக்கணக்கான ரூபாய்கள் லேவாதேவி செய்துவிட்டார். இதற்கிடையில் அவருடைய ஒரு ரூபாய் போய்விட்டதென்றாவது, அல்லது யாராகிலும் எடுத்துக்கொண்டு ஓடிவிட்டார்களென்றாவது, அல்லது ஏதாகிலும் கோர்ட்டில் தாவா நடத்துவதற்குள்ள சம்பவம் நிகழ்ந்துவிட்டதென்றாவது கேள்விப்பட்டதே கிடையாது. இச்சம்பவங்களை வெகு நாளாகக் கண்ணுற்றுவந்த மீர் அக்பர் அலீ என்பார் சேட்ஜியை நோக்கி தாங்கள் கடன் வாங்க வருபவர்களுக்கு போஜன மளிப்பதற்காக ஒவ்வொரு மாதமும் எத்தனையோ ரூபாய்கள் செலவிடுகின்றீர்கள். இதுவன்றி கடன் வாங்கவருபவர்களிற் சிலரை முதலிலேயே திரும்ப அனுப்பிவிடுகின்றீர்கள்; அநேகருக்கு விருந்து சாப்பாட்டிற்குப்பின் விடைகொடுக்கின்றீர்கள்; சிலருக்குக் கடன் கொடுக்கின்றீர்கள்; சிலர் கேழ்ப்பதற்கு அதிகமாக வற்புறுத்திக் கொடுக்கின்றீர்கள். இவ்வாறு கொடுக்கும் ரூபாய்களில் முற்றும் மோசம் போகாது சகலனவும் அப்படியே திருப்பிவந்து விடுகிறது. இவைகளின் இரகசியம் இன்னதென எனக்குத் தெரியவில்லை எனக் கூறினார்.

அதற்கு சேட்ஜீ, மீர்சாஹிபே, கேளும்! கடன்கொடுப்பவர்கள் லாபத்தைக் கருதி கண்ணைக் மூடிக்கொண்டு ரூபாய்களை அள்ளிக்கொடுத்துவிட்டு கடைசியில் அந்த ரூபாய் திரும்பவராதலால் ஒட்டாண்டியாக ஆய்விடுகின்றார்கள். என் அனுபவ பூர்வமான விஷயம் யாதெனில், அழகான உடை, அழகான போர்வை அணிந்திருப்பவர்கள் அநேகமாக வியாபார சம்பந்தமான கொடுக்கல் வாங்கல் செய்வதில் உள்ளதை மறைக்காது சொல்லிவிடுவதில்லை. அவர்களின் சம்பாத்தியத்தில் பெரும்பாகம் அவர்களை அழகுபடுத்துவதிலும் நாவுக்கு ருசிகரமான பதார்த்தங்களைச் சமைத்துச் சாப்பிடுவதிலுமே செலவாய்விடுகின்றது. இதேகாரணத்தை முன்னிட்டுத்தான் என்னிடம் கடன் வாங்கவருபவர்களில், தேவைக்கு அதிகமாய் உடை அணிந்திருப்பவர்களை முதலிலேயே அனுப்பிவிடுகின்றேன். அவர்களோ, கடன் வாங்க வந்திருக்கின்றார்கள்; அவர்களின் பாதங்களில் விலையுயர்ந்த பூட்டுகளும் தலையில் அழகிய ஜரிகை வேலைப்பாடுடைய தொப்பிகளும் காணப்படுகின்றது. இந்நிலைமையில் இவர்கள் வியாபாரஞ்செய்து எவ்வாறு ஐசுவரியங்களைச் சம்பாதிக்கப் போகின்றார்கள். அப்படி ஒருக்கால் இலாபம் கிடைத்தபோதிலும் அவை முழுதும் அவர்களின் சிங்காரிப்புக்கே செலவாய்விடும் என்பதே எனது நோக்கமாகும். இரண்டாவதாக, கடன்வாங்க வருபவர்களை கடைத்தெருவுக்கு அனுப்பி அவர்கள் எந்த வகையில் காலக்ஷேபஞ் செய்து வருகின்றார்களென்று கவனிக்கின்றேன். எனவே எவர்கள் இலவசமாகக் கிடைக்கிறதெனக் கருதி சுவைபொருந்திய பதார்த்தங்களை விலாப்புடைக்க அளவுக்கதிகமாய்ச் சாப்பிடுகின்றார்களோ அன்னோர் வாங்கிய கடனை ஒருக்காலும் திருப்பிக் கொடுக்கமாட்டார்கள். ஏனெனில், சதாவும் ருசிகரமான பதார்த்தங்களைச் சாப்பிட்டுக்கொண்டிருப்பவனும், நாக்குருசி கண்டவனும் ஒருக்காலும் உள்ளதைக் கொண்டு போதுமாக்கிக் கொள்ளமாட்டான். ஆகவே, யான் இவர்களுக்குக் கடன் கொடுப்பதில்லை. சிலர்கட்கு, கடைத்தெருவுக்குச் சென்று தேவையானதைச் சாப்பிடுங்களென்று அனுமதி யளித்திருந்தும் கடலை அல்லது வருத்த மாவு முதலிய அற்பசொற்ப பதார்த்தங்களைச் சாப்பிட்டுவிட்டு திரும்பி வருபவர்கள் விஷயமாய் என் மனதில், இன்னோர் நல்ல முறையில் கஷ்டமெடுத்து சம்பாத்தியஞ் செய்கிறவர்களென்றும், உள்ளதைக்கொண்டு போதுமாக்கிக் கொள்கிறவர்களென்றும் தோன்றி அவர்களுக்குக் கொடுக்கும் ரூபாய்களைத் திரும்பக் கொடுத்து விடுவார்களென்னும் நம்பிக்கையின்மீதுதான் யான் கடன்கொடுக்கத் துணிபுகொள்கிறேன். இது எனது 30 வருட அனுபவமாகும். இவ்வாறு நான் பரிக்ஷித்துப் பார்த்ததில் ஜெயமடைந்திருக்கிறேனே தவிர ஒருக்காலும் மோசம் போனேனில்லை. ஆகவே, நீங்களும் கஷ்டமெடுத்து சம்பாத்தியஞ் செய்து உள்ளதைக்கொண்டு போதுமாக்கிக்கொள்ளும் உத்தமர்கள்மீது பிரீதியும் ஆடம்பரப்பிரியர்கள்மீது வெறுப்பும் கொள்ளவேண்டும் எனக் கூறினார்.

## முஸ்லிம் நேயர்காள்!

சற்று சிந்தனைபுரிந்து பாருங்கள்! சேட்ஜீ, நமது சோதரராகிய மீர்சாஹிபுக்குச் செய்த உபதேசத்தை நமது சன்மார்க்கம் சதாவும் நமக்கு போதித்துக்கொண்டிருக்கவில்லையா? சாதாரண உடை, திருப்திகரமான முறையில் வாழ்க்கை நடத்துவது, உள்ளதைக் கொண்டு போதுமாக்கிக்கொள்வது இவைகளெல்லாம் ஈமானை நிலையுள்ளதாகச் செய்வதற்கு அவசியமானதல்லவா? முஸ்லிம்கள் தேவைக்குஅதிகமாக தங்களை அழகுபடுத்திக் கொள்வதையும், தேவைக்கதிகமாக வேண்டி அனுபவிப்பதையும் விட்டு சன்மார்க்கத்தின் உண்மைக் கட்டளைக்குத் தலைசாய்த்து நேரான பாதையில் நடந்துவருவார்களாயின் அவர்களுக்கு நற்காலம் ஏற்பட்டுவிடாதா? இதுகாலை முஸ்லிம் சமூகமானது பெரும் ஏழ்மைத்தனமுடையதாகயிருக்கும் நிலைமையில், சாதாரண வாழ்க்கை நடத்துவதை விட்டு வெகுதூரம் சென்றுபோயிருக்கின்றது. எனவே சகல முஸ்லிம்களும் சில்க், பட்டு, மக்மல் இவைகளால் நெய்யப்பட்ட ஆடைகளை அணிந்துகொள்வதற்குப் பதிலாய், சாதாரணத் துணிகளினாலுள்ள உடைகளை அணிந்து கொள்வார்களாயின், அவர்களது மனங்கள் தாழ்மை அடைந்து, சாதாரணமாக சகல விஷயங்களிலும் சீர்திருத்தம் பெறுவதன் பக்கல் திரும்பிவிடுமென்பது திண்ணம். இதனை முஸ்லிம்கள் நன்குணர்ந்து சிக்கனத்தைக் கைக்கொண்டு நடக்கும் காலமே முஸ்லிம்கள் ஜெயம்பெற்றுத் திகழ்வதன் நற்காலமாகும் என்பது திண்ணம்.

---

## பாஸ்கரனின் அறியாமையா ? அசம்பாவமா ?

(சிங்கை ஜனப் M. முஹம்மது ஷரீப் சாஹிப் வரைவது)

மதுரை பாஸ்கர தாஸால் இயற்றப்பெற்ற தேசிய கீதம் ஒன்று வி. சரஸ்வதிபாய் என்ற மாதுவால் ஒடியன் M. D. 1070 நெ. ரிக்கார்டில் கீழ்க்கண்ட விதமாய் மதத் தலைவர்களை தூஷித்துப் பாடியதாய்த் தெரிந்ததும் இச்சிங்கை முஸ்லிம்களிடையே பெரும் பர பரப்பேற்பட்டிருக்கிறது.

(பாட்டு)

ஜாதிமத பேதச்சண்டை
தானிப்பூமி சாதனமே
சம்மதித்தெல்லோருமொன்று
சார்ந்திட்டால் விமோசனமே

நீதிதெய்வமொன்றே நினைப்பீர்கள் இன்றே
நேசமில்லாமலே தேசமதையிழந்தோம்(ஜா)

சங்கரர் ராமானுஜர் பின் மத்வபுத்தர்
முகம்மதுவும் தரையில் தோன்றி பொங்கும்
மதவெறி பிடித்து அவரவர்கள் போக்கின்
வழி போனதையோ
இங்கதுவும் போதாமல் இயேசுவென்னும்

ஒருவர்மதம் இடையிலாச்சு
பங்கமற்ற இந்தியர் நாம்

பலபிரிவாய்போனதும் ஒன்பாவம்தானே
காந்திமதமேசதம் கதருடையே ஹிதம்
காருண்யபாஸ்கரன் கூறும் மெய்ப்பக்திபதம்

எமது கருணையங்கடலாம் உலகரட்சகர் ஞானபிதாவாகிய முஹம்மது நபி (ஸல்.) அவர்கள் இவ்வுலகில் தோன்றி அறியாமை, அந்தகாரம், மூடக்கொள்கை, உருவ வழிப்பாடு, சிலை, சந்திரன், சூரியன், கல், மண், மரம், மட்டை, பருந்து, கழுகு, இராசாளி முதலியவைகளையும் கடவுளென்று நம்பி மூட பக்தியால் கும்பிடும் கொள்கைகளை தங்களது ஞானஜோதியின் பிரசாரத்தால் நீக்கி மானிடர்களை சற்குண சீலர்களா யமையச் செய்து இப்பூ உலகின்கண் (70) எழுபது கோடி மக்கள் இன்றைக்கும் தெய்வபக்தர்களாயும், ஒரே கடவுளை வணங்குபவர்களாகவும், உண்மை, சமத்துவம், சகோதரத்துவம் முதலியவைகளை ஒருங்கே நிறையப் பெற்றவர்களாவும் ஆக்கிய எமது ஞானசிறியர் அவர்களை மதவெறி பிடித்தவர்களென பாஸ்கரன் வாய்கூசாது பாடமுற்பட்டது அவரின் அறியாமையா? அசம்பாவமா?

பாஸ்கரனே! நுங்குழாத்தினர், பற்பல பிரிவினர்களாய் பள்ளுபறையர் பதினெண் ஜாதியினராய் உயர்வகுப்பு ஹிந்துக்களென்றும் தாழ்த்தப்பட்டவர், சைவர், பிராமணர்களென்றும், நாய், பன்றி, குதிரை, ஆடு, மிருகங்களைக் காட்டினும் கேவலமாய் தொடக்கூடாதென்றும், சமமாய் உட்காரக்கூடாதென்றும் வேதாந்தம் பேசும் நீங்கள், "ஜாதிமத பேதச் சண்டைதா னிப்பூமிசாதனமே" என்றும், மதவெறியால் விமோசனமில்லை என்றும் புலம்பி இருக்கின்றீர். தவிர நீர் காந்திமதமே சதமென்கின்றீர்! காந்திமதமென்று ஒருமதமும் முளைத்துவிட்டதா? இன்னமும் இவ்வுலகம் அழிபுமுன் இவ்விந்தியாவில் எத்தனையோ ஆயிரக்கணக்கான இயக்கம் தோன்றப் போகிறதோ! அந்தோ பரிதாபம். காந்தி, மதத்திற்காகவா உபவாசமிருக்கின்றார்? அம்பேத்கார் பிரசங்கம் காந்தியின் நெஞ்சை பிளக்கின்றது; எழுகோடி ஹரிஜனங்களும் சன்மார்க்கத்தைத் தழுவி விடுவார்களோ வென்ற திகில் காந்திஜீ ஹிருதயத்தில் சுடர்விட்டெரிகின்றது; பெரும்பான்மை சிறுபான்மையாகி விடுமோவென்று பட்டினிகிடக்க நேர்ந்தது. என்னே அறியாமை! ஹிந்து மதத்தை நிலைநாட்ட காந்தி உயிரை திரணமாக மதித்து விட்டார் என்றால், சமத்துவமும் சகோதரத்துவமும் நிறைந்த சன்மார்க்கத்தைக் காப்பாற்ற ஏன் முஸ்லிம்கள் முன்வரமாட்டார்கள் என்பதை யுணர்வாயாக. முஹம்மது நபி (ஸல்.) அவர்களைப் பற்றி காந்திஜீ, ஜார்ஜ் பெர்னாட்ஷா முதலியவர்கள் என்னசொல்லி இருக்கின்றார்களென்பது உமக்குத் தெரியாதா? அந்த மஹாத்திய மிக்க நபிகட் திலகம் முஹம்மது (ஸல்.) அவர்களையும் இஸ்லாத்தையும் தூஷித்தவர்களின் கதி என்னவாயிற்றென்று உமக்குத் தெரியாதா? தவிர முஹம்மது நபி (ஸல்.) அவர்களின் போட்டோக்களென்று பொரித்துத் தவறாகவும், சரித்திரங்களை திரித்தும் புறட்டியும் பிரசுரஞ்செய்த R. D. சர்மா சகோதரர்கள், ஞானதூதன் ஆசிரியரான பெரியநாயகம் பிள்ளை, கோலார் தங்கவயல் தமிழன், வெஸ்ட்மினிஸ்டர் டொபாக்கோ கம்பெனியார், டிராமாநடிகரான K. சீனிவாசம் பிள்ளைபோலொற்ற அநேக ஆசிரியர்களும், தங்களின் அறியாத்தனத்தால் நிகழ்ந்தமைக்கு மனம் வருந்தி பகிரங்கமாக மன்னிப்புத் தேடிக்கொண்டதுபோல் நீரும் பகிரங்கமாக மன்னிப்புத் தேடிக்கொள்வீராக. இல்லாவிடில் இதன்பின் தொடர்ந்துவரும் வெடிகுண்டுகள் உம்மீது சரமாரியாய்ப் பொழிந்துகொண்டிருக்கும். எமது மதுரை முஸ்லிம்காள்! வாலிப சிங்கங்காள்! இஸ்லாமிய வீரர்காள்! உங்களின் உறக்கத்தை விட்டும் விழியுங்கள்! இஸ்லாத்தையும், அதன் தலைவர்களின் மரியாதையையும் காப்பாற்றுங்கள்!! உங்களுக்கு ஆண்டவன் சஹாபாக்களின் ஊக்கத்தையும் உறுதியையும் அளிப்பானாக. எழுமின், விழிமின், உழைமின்.

---

## குலாமின் குதர்க்கம்.

### பா. தா. காதியானியாய்விட்டால் யாருக்கென்ன ?

(ஜனப் அபுல்ஹஸன் சாஹிப் மத்ராஸீ வரைவது)

சோதரீர்! 12-5-33-ல் வெளிவந்துள்ள தா. இ. வில் "பா. தா. காதியானீயாகப் போகட்டும்............" என்னும் மகுடத்தின்கீழ் 'குலாம்' என்பார் நீண்டதோர் கட்டுரையை வெளியிட்டிருக்கின்றார். அதில் பா. தா. காதியானியாகவே போகட்டும் அல்லது அவர் காபிராகவே போகட்டும் அதனால் எனக்கும் ஏனைய முஸ்லிம்களுக்கும் ஆவதும் போவதும் என்ன இருக்கிறது என்றும், அவரால் எழுதப்பட்ட புஸ்தகங்களை வாங்கிப் படித்து முஸ்லிம்கள் இஸ்லாத்தைத் தழுவவேண்டுமென்றும் குறிப்பிடுகின்றார். அவர் கூற்றுப்படியே பா. தா. எவ்விதமாகவோ ஆய்விட்டும் அதனால் யாருக்கும் எதுவும் நஷ்டமாய் விடவில்லை என்பது திண்ணம். ஆனால் அவர் நேரத்திற்கொரு மாதிரியாகவும், சமயத்திற்கொரு விதமாகவும் தன் கொள்கையை வெளியிட்டு வருகின்றார். எனவே சில சமயத்தில் தனக்கும் காதியானி இயக்கத்திற்கும் எவ்வித சம்பந்தமுமில்லை என்று பிரமாணஞ் செய்கின்றார். மற்றொரு சமயத்தில் அவர்களின் கொள்கைதான் தனக்குப் பிடித்தமாக இருக்கின்றது; அதுதான் சன்மார்க்கமாகும் என ஓலமிடுகின்றார். ஆகவே, பொதுமக்கள் அவருடைய கொள்கையைப் பகுத்தறிந்துகொள்ள முடியாது மோசம்போக ஹேதுண்டாய்விடுவதால், அவருடைய கொள்கையை மறுத்து பொது ஜனங்களுக்கு விளக்கிக் காண்பிக்க வேண்டியிருக்கிறது. ஒரு சமயம் அவருக்கு காதியானிக் கொள்கைகள்தான் சன்மார்க்கமென்று தோன்றலாம். அப்படியாயின் அதனை பஹிரங்கமாக வெளியிட்டு விடுவதுதான் ஆண்மைத்தனமாகும். அதுவன்றி இவ்வாறு பாசாங்குசெய்வது யார் கண்ணில் மண் போடுவதற்காக வென்பது புலனாகவில்லை?

குலாமால் வரையப்பட்டுள்ள கட்டுரையில் மறுக்கப்படத்தக்க விஷயங்கள் பல உள. அவைகளிற் ஒரு சிலவற்றை இங்குக் குறிப்பிடுவோம். அக்கட்டுரையில் அவர் குறிப்பிடுவதாவது:—

சமீபத்தில் இஸ்லாமிய ஞானபோதம் என்னும் நூல் வெளியாகி அதைப்பற்றிய விளம்பரங்கள் வெளியாவதிலிருந்து நமது ஆசிரியர் மௌலானா பா. தா. வும், மௌலவீ யூசுப்சாஹிப் அவர்களும் ..............அஹமதீகள் தாம் என்று எதிரிகள் இப்பொழுது உறுதிகொண்டு

ஒப்பாரி வைக்க ஆரம்பித்துவிட்டிருப்
பார்கள். ............... இஸ்லாமிய ஞான
போதம் என்பது அஹ்மதிய இயக்கத்
தைக் கண்ட காதியானி மிர்ஜா குலாம்
அஹ்மத் என்னும் பெரியாரால் உர்து
வில் இயற்றப்பெற்றது. இந்த மிர்ஜா
சாஹிபை உலகம் போற்றும்படி செய்த
நூல்களில் சிறந்தது இந்த உர்தூ கிரந்த
மேயாகும். இந்த நூலினால் அவருக்
கேற்பட்ட சிறப்பும் செல்வாக்குமே
தான் மிர்ஜா சாஹிபினுடைய அந்திய
காலத்தில் அவருக்கு மனக் குழப்பத்
தை உண்டாக்கிவிட்டு தம்முடைய சிற
ப்பை என்றென்றும் நிலைத்து நிற்கும்
படி செய்துவிட வேண்டுமென்னும் தற்
பெருமைக்கு ஆளாகி, தம்மை நபி என்
றும் ஈஸாவென்றும் கிருஷ்ணனென்
றும் புத்தரென்று மெல்லாம் அழைத்
துக்கொள்ளச் செய்திருக்குமென்று
நான் நினைக்கின்றேன். இவர் தம்மை
தெய்வமென்றே அழைத்துக் கொண்
டாலும் அதனால் இவருடன் நான்
பிணக்குக் கொள்ளமாட்டேன். ஏன்
கொள்ளவேண்டும்? என்பது தான்
எனக்கு விளங்கவில்லை............... இன்
னும் பலர் தங்களை தெய்வங்களாக
அழைத்துக் கொள்வதாகப் படித்து
வருகின்றோம். அவருடனெல்லாம் நாம்
பிணக்குக் கொள்கின்றோமோ? இல்லை.
சித்த சுவாதீனமற்றவர்களென்று கரு
திக்கொண்டு கவலைகொள்ளாதிருக்கின்
றோம். இந்நிலைமையிலேயே மிர்ஜா
சாஹிபை கருதிவிட வேண்டுமென்பது
என் யோசனை. என வரைகின்றார்.

மிர்ஜா குலாம் தன்னை நபி என்று தாவாச்
செய்ததில் பயித்தியம் பிடித்து உளறிவிட்டா
ரென்று குலாம் நினைக்கின்றார். ஆனால்
அவர் எழுதிய நூற்கள் மகா சிறந்தவை
களென்றும் செல்வாக்குடையவைகளென்
றும் இவர் வரைந்துவிட்டு, அவரை பயித்த
காரரென்று ஒதுக்கிவிட வேண்டுமென
மூரண்படக் கூறுவது பெரும் பயித்தியகாரத்
தனமாகுமென்று உலகம் கருதுமென்பதி
லய்யமில்லை. இதில் ஒரு விசேஷம் யாதெ
னில், மிர்ஜா நபித்துவத்திற்கு லாயக்கற்றவ
ரென்று குலாம் உணர்ந்து கொண்டதே
யாகும். மிர்ஜா; தன்னை நபி என்று கூறி
ஒரு தனி மதத்தை ஸ்தாபிக்க முயன்றார்
என்பதை குலாம் ஒப்புக் கொள்கின்றார்.
என்றாலும் அஹ்மதிய இயக்கத்தைக் கண்ட
காதியானீ என்று மிர்ஜாவை வரணிக்கின்
றார். ஒரு மதத்தை ஸ்தாபிக்க முயன்ற
வரை மதத் தலைவரென்று அழைக்கவேண்டி
யிருக்க, அவ்வியக்கம் கண்டவரென்று கூறு
வது பொருத்தமற்றதாகும். ஆனால் பொது
மக்கள் இது சன்மார்க்கத்திற்கு முரணில்லாத
சாதாரண ஏதோ ஒரு இயக்கமென்று அறி
ந்து கொள்ளட்டு மென்பதற்காகவே இவ்
வாறு கபட வார்த்தையை உபயோகித்திருக்
கின்றார் போலும். இஃதொரு பக்கல் கிடக்க,
மிர்ஜா தம்மை தெய்வமென்றே அழைத்துக்
கொண்டாலும் (அவ்வாறே தன்னை தெய்வ
மென்றும் மிர்ஜா தாவாச் செய்திருக்கிறான்)
அவருடன் நான் பிணங்கிக் கொள்ளமாட்
டேன் என குலாம் கூறுவது பெரும் ஆச்
சரியமாக யிருக்கிறது. தன்னை தெய்வ
மென்று கூறும் ஒருவனை மறுத்து அவனை
நேர்வழிக்குக் கொண்டு வருவது முஸ்லிம்
களின் கடமையாகும். முற்காலத்தில் அவ்
வாறு தாவாச் செய்த பிர்ஔன், நம்ரூத்
முதலானவர்கள் மறுக்கப்பட்ட விஷயம்
திருக்குர்ஆனில் பஹிரங்கமாக யிருக்க,
மிர்ஜா தன்னை தெய்வமென்று அழைத்தா
லும் தான் பிணக்கங் கொள்ளமாட்டேன்
என்று கூறுவது திருக்குர்ஆன் போதனைக்கே
முற்றும் முரணானதாகும். இந்நிலைமையில்,
இந்நூற்றாண்டில் இஸ்லாத்தின் ஜோதியைப்
பரவச் செய்து வந்தவர்களுள் மிர்ஜா
சாஹிபே வெற்றியுடன் பணி செய்து புகழ்
பெற்றவரென்று கூறுவது முழு அறியாமை
யேயாகும். மேலும் குலாம் வரைவதாவது:-

ஆனால் நான் கூறுவது இதுவே.
பா. தா. காதியானியாக போனதாக
வைத்துக் கொள்வோம். அவர் காபி
ராகவே போகட்டும். அதனால் எனக்கும்
ஏனைய முஸ்லிம்களுக்கும் ஆவதும் போ
வதும் என்ன என்று கேழ்க்கின்றேன்.
அவர் அப்படி மாறுவதைத் தடுக்கும்
படி இஸ்லாம் ஏவுகின்றதா? இஸ்லாம்
அவரவருடைய மதம் அவரவருக்குச்
சிறந்தது; மதத்தில் பலவந்தமில்லை
என்று போதிக்கின்றதாதலால், பா. தா.
காதியானியாகப் போகட்டும், கிறிஸ்தவ
ராகட்டும், ஆரிய சமாஜியாகப் போகட்
டும் நாம் ஏன் அதற்காக வெகுண்டுவிட
வேண்டுமென்பதுதான் விளங்கவில்லை
...................என்பதே.

ஒருவன் சன்மார்க்கத்தைவிட்டு மாறுவது
மாபெரும் குற்றமான காரியமேயாகும்.
எனவே, அவ்வாறு மாறுபவர்களுக்கு தக்க
ஹிதோபதேசஞ் செய்து மத மாறாதிருக்
கும்படி, செய்வது முஸ்லிம்களின் மீதுள்ள
கடமையாகும். அவ்வாறு உபதேசஞ் செய்
யப்பட்டும் அதனைக்கேளாது தான் பிடித்த
முயலுக்கு மூன்றே கால் என சாதித்து
அகாரணமாய் மதமாறி விடுவானாகில் அதைப்
பற்றி முஸ்லிம்களுக் கொன்றுமில்லை. இந்நிலை
மையில் பா. தா. காபிராய் விட்டாலும், காதி
யானியாகி விட்டாலும் எமக்கொன்றுமில்லை
என்று குலாம் கூறுவது விபரீதக் கூற்றன்
றோ? அவ்வாறு ஒருவர் காபிராகவே ஆகட்டு
மென்று பொருந்திக் கொள்வதும் அக்
குற்றத்தைச் செய்ததற்கொப்பாகுமென்பது
மார்க்கக் கட்டளையாகும். தவிர பா. தா.
எழுதிய தவறான கூற்றுக்கள் தக்க ஆதாரங்
களோடு எண்பிக்கப்பட்டு அவைகளைத் தவ
றெனவும் அவர் ஒப்புக்கொண்டு திருத்தி
அமைத்துவிடுவதாக பஹிரங்க அறிக்கையும்
வெளியிட்டார். ஆனால் அவர் இதுவரை அவ்
வாறு செய்யாதிருப்பதுதான் ஏமாற்றத்திற்
குறியதாக யிருக்கிறது. இவ்வாறு அவரை
நேர்வழிக்குக்கொண்டு வருவதற்கு முஸ்லிம்
கள் அரும்பாடுபட்டுக் கொண்டிருக்கும் நிலை
மையில், எப்படியாகி விட்டாலும் யாருக்கும்
ஒன்றுமில்லை என்று குலாம் வரைவது அவ
ரின் அறியாமையை விளக்கிக் காட்டுகிற
தன்றோ? மேலும் குலாம் கூறுவதாவது:

பா. தா. வகைராவினரை காதியானி
என்று கருதினாலும் கவலையில்லை. அவர்
கள் வெளியிடும் நூல்கள் இஸ்லாத்திற்கு
முரணானவைகளாகஇல்லாதவரைக்கும்,
அவை இஸ்லாத்திற்கு முற்றிலும் ஏற்ற
தாகயிருக்கும் வரைக்கும் அவை யா
ரால் வெளியிடப்பட்டால்தானென்ன?
நாம் என்னவோ உண்மை முஸ்லிம்க
ளாகயில்லை என்பது உண்மைதானே!
நாம் கூடிய சீக்கிரம் இஸ்லாத்தைத்
தழுவ முயற்சித்தல் வேண்டும். என்
பதே.

பா. தா. எக்கொள்கையுடையவராகயிருப்
பினும் அவரால் எழுதப்படும் நூல் நேர்மை
யாக இருக்கும்வரை அதை வாங்கிப்படித்து
முஸ்லிம்கள் இஸ்லாத்தைத் தழுவவேண்டு
மென்பது குலாமின் கருத்தாகும். பொது
வாக நூல்கள் சன்மார்க்கத்திற்கு முரண்
பட்டிருக்கக் கூடாதென்பதை யாவரும் ஒப்
புக்கொள்வர். குலாமின் கொள்கையும் இது
தான் என்பது அவருடைய கட்டுரையிலி
ருந்து நன்கு புலனாகின்றது. மிர்ஜா காதி
யானியும் அவரைச் சார்ந்தவர்களும் வழி
கெட்ட கொள்கைகளை யுடையவர்களென்ப
தை பா. தா வும், குலாமும் ஒப்புக்கொள்கின்
றனர். அதனால் அவர்களைப் பின்பற்றி எழு
தப்படும் நூல்கள் சன்மார்க்கத்திற்கு முர
ணாகத்தானிருக்கு மென்பது வெள்ளிடை.
மார்க்க முரணான நூல்களை முஸ்லிம்கள்
கையாளக் கூடாதென்பது குலாமுடையவும்
கொள்கை யாகும். எனவே பா. தா. வின்
நூல்களிலிருந்து அநேக மார்க்க முரண்கள்
எண்பிக்கப்பட்டு வருவதால் அவருடைய
நூல்களையும் முஸ்லிம்கள் வாங்கிப் படிப்பதி
னால் வழிகேடு உண்டாகுமென்பதில் எவ்வித
சந்தேகமு மில்லை. மிர்ஜா எம்பெருமானார்
(ஸல்.) அவர்களுக்கு எதிரிடையாய் தான்
ஒருநபி என்று தாவாச்செய்தார்; தன்
னுடைய போலிநபித்துவத்தை உலகமுழுதி
லும் பரவச் செய்வதற்கு முயன்றார்; தனக்
கென ஒரு மார்க்கத்தைப் பிரகடனப்படுத்தி
னார்; இற்றைக்கும் இவ்வழிகேடனைப் பின்
பற்றும் கபோதிகளில் ஒருசிலர் இல்லாம
லில்லை. இவர்களைப் பின்பற்றி-இல்லை-காப்பி
அடித்து வெளியிடும் நூல்கள், அஞ்ஞான
போதங்கள், சன்மார்க்க பேதங்கள் எவ்
வாறு எம்பெருமானார் (ஸல்.) அவர்களுடைய
மார்க்கத்திற்கு நேர்மையானதாக யிருக்கு
மென்பது எமக்கு விளங்கவில்லை. ('இஸ்லாத்
தின் ஞானபோதம்' ஆராய்ச்சியின் கீழ் இருந்
துவருகிறது. அதன் வண்டவாளம் இன்ஷா
அல்லாஹ் கூடிய சீக்கிரம் வெளிவரும்.)

காதியானிக் கொள்கை தப்பானதென்ப
தை தமிழ் நாடென்ன, உலகமுழுதிலும் பிர
சாரம் செய்யப்படுகின்றது. பா. தா. வால்
அது சம்பந்தமாய் வெளியிடப்பட்டு வரும்
கூற்றுக்களுக்கு தக்க மறுப்புகளும் வரையப்
பட்டு வருகின்றது. பா. தா. வோ தான்
காதியானிக் கொள்கை யுடையவரல்ல
வென்று ஒரு சமயம் எழுதினாலும் மறு
சமயம் நேர்முகமாகவும் மறைமுகமாகவும்

காதியானிகளின் கூற்றுக்களை வெளியிட்டு வருகின்றார். இந்நிலைமையில் ஒருசமயம் காதியானிக் கொள்கை தான் சரியானதென்று அவருக்குப் புலப்படுமாயின், அதனைத் தைரியமாய் வெளியிட்டுவிட்டு அதற்கான அத்தாக்ஷிகளையும் பஹிரங்கப்படுத்தலாம். இஷ்டப்பட்டால் முஸ்லிம்களோடு விவாதமும் செய்யலாம். அவ்வாறு அவர் பஹிரங்கமாக தான் காதியானி என்று வெளியிட்டுவிடுவதால் எவருக்கும் கெடுதி ஒன்றுமில்லை. அதைப்பற்றி முஸ்லிம்கள் பொருட்படுத்தாது அவருடன் சன்மார்க்கக் கட்டளைப்படி நடந்துகொள்வர். அதனால் பொதுமக்களுக்கு ஏமாற்ற மேற்படாது. மேலும் இவர்களால் வெளியிடப்படும் பத்வாக்களெனப்படுபவைகள், மார்க்க வினாவிடைகளெல்லாம் இக்குழாத்தினர்களின் கொள்கை என ஒதுக்கிவிடுவர். அவ்வாறின்றி தான் ஒரு முஸ்லிம் சீர்திருத்தக்காரரென்றும், இஸ்லாமியத் தொண்டு புரிவரென்றும், நவீன முறையில் இஸ்லாத்தைப் பிரசாரஞ்செய்து வருபவரென்றும் பறைசாற்றிக்கொண்டு அந்தரங்கத்தில் காதியானிப் பிரசாரஞ்செய்து வருவதால்தான் முஸ்லிம்கள் அவருடைய கூற்றுக்களைக் கண்டிக்க வேண்டியதாக இருக்கின்றது. எனவே அவர் சன்மார்க்கத்தில் தலையிடாதிருப்பாராகில், குலாம் கூறுவதுபோல் முஸ்லிம்கள் பா. தா. வை அவருடைய கொள்கைப்படியேவிட்டுவிடுவர் என்பது திண்ணம். பா. தா.வின் கூற்றுக்களுக்கு பலவாறு சப்பக்கட்டு கட்டிவரும் குலாம், பா. தா. வுக்கு உபதேசஞ்செய்து தீய வழிகெட்ட பிரசாரஞ் செய்யாதிருக்க முயற்சிப்பாராகில், அவர் இவ்வளவு சிரமமெடுத்துக்கொள்ள வேண்டிய அவசியமேற்பட்டிராதென்பதை நன்குணர்வாராக.

---

## பஹிரங்க வினாவுக்கு ஆப்பு.

### பினாங் ஜனாப் M. A. அப்துல்காதரின் அறியாமையும், பா. தா. வின் விபரீதப்போக்கும்

சோதரீர்! இதுகாலை நம் முஸ்லிம்களை, முஹம்மதியர்களென்றும் இஸ்லாத்தை முஹம்மதிய மார்க்கமென்றும் அழைக்கக்கூடாதென்று ஒரு சிலர் வாதாடி வருகின்றனர். இது தேவையற்ற நூதனக் கிளர்ச்சியேயாகும். ஹஸ்ரத் சையிதுனா ஆதம் (அலை.) அவர்கள் முதல் எம்பெருமானார் நபிகள் திலம் (ஸல்.) அவர்களை இறுதியாக இலக்ஷக்கணக்கான நபிமார்கள், ரசூல்மார்கள் வந்திருக்கின்றார்கள். அவர்கள் யாவருக்கும் அருளப்பட்ட மார்க்கம் இஸ்லாமே யாகும். இதில் ஒரு நபிக்கு அருளப்பட்டிருந்த மார்க்கத்தைக் குறித்துப்பேசுங்கால், அவர்கள் பக்கல்சேர்த்து உதாஹரணமாக, மில்லத்த இப்ருஹீம் என்றும், மூஸவிய்யாஹ், ஈஸவிய்யாஹ், முஹம்மதிய்யாஹ் என்றும் குறிப்பிட்டு அழைக்கும் வழக்கமிருந்துவருகிறது. சன்மார்க்கஅரபி கிரந்தங்களில் ஒரு சிறிதேனும் அனுபோகமுள்ள எவரும் இதனை நன்கறிவார்களென்பதிலய்யமில்லை. மேலும் திருக்குர்ஆனில் ஹஸ்ரத் யூசுப்(அலை.) அவர்களின் சரிதையில் “நான் (ஈசுப் அலை) என்னுடைய முதியோர்களான இப்ருஹீம், இஸ்மாயீல், யஅகூப் (அலை.) இவர்களுடைய மார்க்கத்தைப் பின்பற்றுகின்றேன்” (ஸூரத்துல் ஈசுப்) என அருள் செய்யப்பட்டிருக்கின்றது. அங்கு ஈசுப் (அலை.) அவர்களுடைய பாட்டன்மார்களுடைய மார்க்கத்தைக் குறிப்பிடுங்கால், இப்ருஹீம், இஸ்மாயீல், யஅகூப் (அலை.) இவர்களுடைய மார்க்கமென்று அழைக்கப்பட்டிருப்பதை காண்க. ஆகவே எம்பெருமானார் (ஸல்.) அவர்களுடைய மார்க்கத்தைக் குறிப்பிடுங்கால், முஹம்மதிய மதமென்றும், அவர்களின் உம்மத்துகளைக் குறிப்பிடுங்கால் முஹம்மதியர்களென்றும் அழைப்பதில் குற்றமொன்றுமில்லை என்பதிலய்யமில்லை. மார்க்க அரபி கிரந்தங்களில் ‘உம்மத்த முஹம்மதிய்யா’ வென்றும், ‘ஷரீஅத்த முஹம்மதிய்யா’ வென்றும் கூறப்பட்டிருப்பதை நேயர்கள் அறிவார்களாக.



நிலைமை இவ்வாறிருக்க, இதற்கு மாற்றமாய் நம்மை முஹம்மதியர்களென்றும், நமது சன்மார்க்கத்தை முஹம்மதிய மார்க்கமென்றும் அழைப்பது கூடாதென பல அறிஞர்களும் தலைவர்களும் கண்டித்து வருகின்றார்களென்று பினாங் M. A. அப்துல்காதர் என்பவர் வரைகின்றார். அவ்வாறு எந்தத் தலைவர்கள் எங்கு கிளர்ச்சி செய்து வருகின்றார்களென்பதையும் அவ்வாறு கூறக் கூடாதென்பதற்குக் காரணம் யாதாகுமென்பதையும் அவர் வெளியிடுவாராக.

அவ்வாறு கூறுவது குற்றமில்லை என ஹி. இ. ஆசிரியரவர்களால் எழுதி அனுப்பப்பட்டிருந்த நிருபத்தைக் குறித்து ‘குலத்தைக் கெடுக்கவந்த கோடறிக்காம்பு’ என உளறுகின்றார். அவருடைய அறியாமைக்குத் தான் வருந்தவேண்டி இருக்கின்றது. அதில் ஏதேனும் குற்றமிருப்பின் அதனை எடுத்துக்காட்ட அவர் கடமைப்பட்டிருக்கின்றார். தவிர குலத்தைக்கெடுக்கும் கோடறிக் காம்பு இன்னாரென்று அவருக்கு விளங்காது போனதுதான் விந்தைக்குறியதாகும். ஒருபுறத்தில் சுயமரியாதைக்காரர்களை மறுப்பதுபோல் பாசாங்கு செய்துகொண்டு மற்றொருபுரத்தில் அவர்களுடைய தலைக்கடைக்குச் சென்று அந் நாஸ்தீக மௌத்தாவின் ஆத்மா சாந்தி அடையும்படி பாத்தியா ஓதும் முல்லாவாகிய பா. தா. தான் கோடறிக் காம்பென்பதை அவர் நன்குணர்வாராக. இராகவன்போலொற்ற நாஸ்தீகர்களுக்கு இஸ்லாத்தைத் தூஷிப்பதற்குக் கற்றுக்கொடுத்து அவர்களின் ஆபாசக்கட்டுரைகளைப் பத்திபத்தியாக வெளியாக்கும் தா. இ. குலத்தைக் கெடுக்கவந்த கோடாரிக்காம்பென்பதை நண்பர் உணராதுபோனது அவரின் அறியாமையேயாகும்.

காத்யான்போலி நபியின் பதற்கூற்றுகள் நம் தமிழ்நாட்டின் கண்ணே வெகு தந்திரமாய்ப் பிரசாரஞ்செய்யப்பட்டு வருவதைத் தடுப்பதற்கு ஹி. இ. அரும்பாடுபட்டு வருகின்றது. இந்நிலைமையில் பா. தா. வும் அவரின் சஹாப்பாடியும், அப்போலி நபியைப் பின்பற்றுபவர்கள் முஸ்லிம்கள்தான் என்றுவாய் வேதாந்தம் பேசிவருகின்றனர். இதனைத் தடுப்பதற்கு முஸ்லிம்கள் மாபெரும் கிளர்ச்சி செய்யவேண்டியதிருக்க, அனாமசியமான காரியங்களில் தலையிட்டு நூதனக் கிளர்ச்சிகளை உண்டுபண்ணவேண்டுமென்னும் நோக்கத்தோடு தேவையற்ற-முக்கியமல்லாத காரியங்களில் தலையிடுவது உசிதமல்லவென்பதை நேயர்கள் நன்குணர்வார்களாக.

விவாதத்தில், முஸ்லிம்களை அஹ்மதியர்களென்று அழைப்பது குற்றமாகுமாவென கேழ்கப்பட்டு, அவ்வாறு அழைக்கலாம் என்று பதில்சொல்லப்பட்டிருந்தது. இதுபொழுது நண்பர் விவாதத்தைவிட்டு பல்ட்டியடித்து, இஸ்லாம், முஸ்லிம் என்னும் பெயரைவிட முஹம்மதிய மதம், முஹம்மதியர் என்னும் பெயர் சிறந்ததென்று குர்ஆன் ஹதீது ஆதாரம் காட்டமுடியுமா? என வினவுகின்றார். ஆனால் விவாதத்தில் முஹம்மதியர், முஹம்மதியமார்க்கம் என்று சொல்லலாமா? சொல்லக்கூடாதாவென்றும் பிரச்சினை ஏற்பட்டிருக்கும் நிலைமையில், இவர் அதனை மாற்றிப்புரட்டி, மேல்கீழ் என்பதற்கு ஆதாரம் காட்டும்படி அழைப்பது அவரின் அறியாமையேயாகும். எனவே நண்பர் அப்துல்காதர் என்பார் முஹம்மதியர், முஹம்மதிய மார்க்கமென்று அழைப்பது கூடாதெனச் சொல்வாரானால் அதற்கு தக்க ஆதாரம் காட்ட முன்வருவாராக.

---

## காதியானியில் ஹஜ்ஜாம் ?

(ஜனாப் M. சுல்தான் சாஹிப் வரைவது)

காதியானி மதஸ்தாபகரான மிர்ஜா குலாம் அஹ்மத் என்பவரின் குமாரரும், தற்கால காதியானி வர்க்கத்தலைவரும் (கலிபாவும்)மாகிய மிர்ஜாமஹ்மூத் என்பார், தற்காலை ஒரு நவீன ஹஜ்ஜை ஸ்தாபித்திருக்கின்றார். இவரென்ன? இவருடைய தந்தையாரான மிர்ஜாவுக்கும் இதே நோக்கந்தான் இருந்து வந்தது. எனவே, ‘தான் நபி என்று அவர்

தாவாச் செய்ததிலிருந்து, தனக்குப் பிரத்தியேகமான ஒரு உம்மத்து இருக்கவேண்டுமென்பதும், பிரத்தியேகமான மதமும் அதற்கேற்பவுள்ள நூதன அனுஷ்டானங்களும் ஏற்பட்டிருக்க வேண்டுமென்பதும் அவருடைய பேரவாவாக இருந்துவந்தது. மேலும் தனது காத்யான் நகரை புண்ணிய ஸ்தலமாக ஆக்கிவிட வேண்டுமென்பதும் அவருடைய நோக்கங்களிலொன்றாகும். அதற்காகவே திருக்குர்ஆனிலும் காத்யான் என்னும் ஊரின் நாமம் "இன்னா அன்ஜல்னாஹு கரீபன் மினல் காதியான்" எனக் கூறப்பட்டிருப்பதாக உளறிக்கொட்டினார் தவிர ஈஸா(அலை.) அவர்கள் திமஷ்க்கின் வெள்ளை மினாராவில் இறங்குவார்களென்று ஹதீது ஷரீபில் கூறப்பட்டிருப்பதால், தானும் வாக்களிக்கப்பட்ட மஸீஹென்று நிரூபிப்பான் வேண்டி தன்னுடைய காத்யான் நகரில் ஒரு வெள்ளை மினாராவையும் ஸ்தாபித்தார். இதுபொழுது தந்தையின் அபிலாஷையைப் பூர்த்திசெய்வான் வேண்டி மிர்ஜாமஹ்மூத், காத்யான் நகரில் ஹஜ்ஜை ஏற்படுத்த பகீரதப் பிரயத்தனஞ் செய்துவருவதால், இனி அவ்விடத்தில் சபா மர்வா, மினா முஜ்தலிபா, கஃபா அரபா முதலிய இடங்களைக் குறிப்பிடுவாரென்பதிலய்யமில்லை. இது சம்பந்தமாய் அவர் அல்பஜ்ல் பத்திரிகையில் வெளியிட்டிருப்பதாவது:—

இக்காலை மக்காவிற்குச் சென்று ஹஜ்ஜு செய்வது அநேகருக்கு கஷ்டமாய்விட்டது. 'அவ்விடத்தில் அமைதி, கட்டுப்பாடு, சமாதானம் முதலியன இல்லாது போயிற்று. இதற்காக அல்லாஹ் ஒரு லில்லி ஹஜ்ஜை ஏற்பாடு செய்திருக்கிறான். ஹஜ்ஜின் பிரதான நோக்கம் இதுசமயம் தவறிப்போயிருப்பதால் அன்னோக்கம் காத்யான் உடைய ஹஜ்ஜால் பூர்த்தியாய்விடும்.

சோதரீர்! இக்காலை மக்காமு அல்லமாவில் நடைபெற்று வரும் விஷயங்கள் யாவும் மிர்ஜாமஹ்மூதுக்குத் தெரியவில்லை போலும். உலகமே பிரமிக்கத்தக்கவிதமாய் ஹிஜாஸில் அமைதியும் சமாதானமும் நிலவிவிட்டதென்பதை முழு உலகமும் உணர்ந்திருக்கிறது. இற்றைக்கு அங்கு நிலவியிருக்கும் அமைதிக்கு உலகிலுள்ள வேறு எந்த நகரையும் உவமையாகக் காட்டமுடியாது; போக்குவரத்துசாதனங்களிலும் அநேகசௌகரியங்கள் ஏற்பட்டுவிட்டன; இரண்டு நாள் பிரயாணஞ் செய்துகொண்டிருந்த இடத்தைஇரண்டுமணி நேரத்தில் பிரயாணஞ் செய்யக் கூடிய வசதியும் இன்று ஏற்பட்டுப் போயிற்று. இதனை உணராது இதுபொழுது மக்காவுக்குச் சென்று ஹஜ்ஜு செய்வது மிகவும் கஷ்டமாய் விட்டதென்று பஷீர் கூற முற்பட்டுவிட்டார். இவரின் அறியாமைதானென்னே!

மக்கமா நகருக்குச் சென்று பைத்துல்லாவை தரிசித்து ஹஜ்ஜு செய்யும்படி அல்லாஹ்த ஆலா அருள் செய்திருக்கின்றான். இஃது திருக்குர் ஆனின் கட்டளையாகும். இதனை உணராமலோ உணர்ந்தும் முறணாகவோ தன்னகருக்குச் சென்று ஹஜ்ஜு செய்யும்படி உளரிக்கொட்டுகின்றார். இது குர்ஆனை மறுத்த குற்றமாகுமென்பதிலய்யமில்லை. இனி தன்னுடைய உம்மத்துகளுக்கு, தன் நகரை நோக்கித் தொழும்படி உத்திரவிடாதிருப்பாரென்று நினைப்பதற்கில்லை.

இக் கொள்கையுடையவர்கள் சன்மார்க்கத்தை விட்டு வெகுதூரம் புறம்பானவர்களென்பதில் யாது சந்தேகமுளது? இங்கு மற்றோர் விஷயத்தையும் குறிப்பிடாமலிருக்க முடியவில்லை. சமீபத்தில் சாத்தன் குளத்தில் ஒரு சிலர் இக்குழாத்தினரைப் பின்பற்றி மிர்ஜாவை நபி என்று உறுதிகொண்டு ஒரு தனி ஜமாஅத்தை நியமிப்பதற்கு முற்பட்டு முஸ்லிம்களுடன் நின்று தொழுவதை மறுத்து தனியே தொழுவதற்கும் ஏற்பாடு செய்ய முயற்சித்தனர். இக் கெட்ட கொள்கையை அகற்றி பொது ஜனங்களில் இவ்வியக்கம் பரவாமல் செய்வதற்காக உலமாக்களும் முக்கியஸ்தர்களும் அங்கு சென்றிருந்தனர். இது விஷயத்தில் 'ஹிபாஜத்துல் இஸ்லாம்' சங்கம் எடுத்துக்கொண்ட முயற்சி மிகமிகப் பாராட்டத் தக்கதாகும். அவ்வாறு முயற்சி செய்யப்பட்டு அக்கொள்கை நசுக்கப்படாதிருப்பின் தென்னாட்டில் காதியானி வகுப்பு தலைசிறந்திருக்கும். அங்கு நடைபெற்ற கிளர்ச்சியாலும் பிரசாரத்தாலும் காதியானிக் கொள்கையின் கெடுதல்கள் பிரபல்யமாய் விட்டது. அது சம்பந்தமாய் எனது நண்பர் மௌலானா அபுல்ஹஸன் சாஹிப் அவர்கள் 'காதியானி மத சம்ஹாரம்' என்ற நூலை இயற்றி வெளியிட்டது பொது மக்களுக்குப் பேருபகாரமாகயிருந்தது. அந்நூலின் பெயருக்கேற்ப தென்னாட்டில் காதியானிக் கொள்கையை சம்ஹரித்துவிட்டது. அந்நூலில் காதியானிக் கொள்கைகளின் பூர்வாங்க விஷயங்களையும் அதற்குத் தக்க மறுப்புகளையும் வெளியிட்டிருந்தது யாவருக்கும் பெரிதும் பயன் அளித்துவிட்டது. எனவே நமது தமிழ் நாடு, நண்பர் மௌலானா அபுல்ஹஸன் சாஹிப் அவர்களுக்கு என்றென்றும் நன்றிசெலுத்தக் கடமைப்பட்டிருக்கின்றது. காதியானிகள், அஹ்மதிகளுடன் மல்லாடும் கனவான்களுக்கு இந்நூல் மிகமிக அவசியமானதாகும். நிலைமை இவ்வாறிருக்க, காதியானிகளுடன் மல்லாட சாத்தன் குளத்திற்குச் சென்றிருந்த உலமாக்களைக் குறித்து, 'ஐயகோ, 500 மைலுக்கப்பால் சென்று முஸ்லிம்களான காதியானிகளைக் காபிராக்கச் சென்றுவிட்டனரே' என்று தென்னாட்டு ஏஜண்டான பா. தா-வும் அவரின் சகபாடியும் கூக்குரலிட முற்பட்டனர். மிர்ஜாவையும் அவருடைய கலீபாவான பஷீரையும், சிஷ்யரான முஹம்மத் அலியையும் பக்கா முஸ்லிம்களென்று பிரகடனப்படுத்தினர். இக்குழாத்தினர்களின் இஸ்லாத்தை சற்று உற்று நோக்குவீர்களாக. இதுதான் இவர்களின் இஷாஅத்தே இஸ்லாம்போலும்.

---



## 'யவ்முந்நபீ' திருநபித் திரு தினம்

சோதரீர்! 'யவ்முந்நபீ'யைக் கொண்டாடும் அவசியத்தைப்பற்றி யாம் பன்முறையும் விவரித்துள்ளோம். இப் பிரபஞ்சத்திலுள்ள சகல சமுகத்தினிடையேயும், பற்பல பாஷைகளிலும் எம்பெருமானார் (ஸல்.) அவர்களுடைய நற்குண நல்லொழுக்கங்கள் பரவவேண்டுமென்பதும், ஒவ்வொரு மானிடரும் எம்பெருமானார் (ஸல்.) அவர்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றி தங்கள் வாழ்க்கையைச் சீர்தித்திக் கொள்ளவேண்டுமென்பதும், இஸ்லாம் அதன் திருத்தூதர் அவர்களைக் குறித்துப் பரவியிருக்கும் கெட்ட எண்ணங்கள் அகற்றப்படவேண்டுமென்பதும் இவ்வியக்கத்தின் பிரதான நோக்கமாகும்.

இவ்வியக்கம் ஆரம்பிக்கப்பட்டு நான்கு ஆண்டுகள் பூர்த்தியாகி இற்றைக்கு ஐந்தாவதாண்டு ஆரம்பமாகின்றது. உலகிலுள்ள சர்வ முஸ்லிம்களும் இவ்வியக்கத்தை வரவேற்று ஒரே தோரணையில் பணியாற்றி வருகின்றனர். இவ் வேலைத் திட்டத்தின் காரணமாய் சென்ற வருடங்களில் ஸீரத் பிரசங்கம் பிரதானமான இருபது பாஷைகளில் 12 இலக்ஷம் காப்பிகள் வரை விநியோகிக்கப்பட்டன. இதனால் பிரபஞ்சத்தின் நானாதிசைகளிலும் எம்பெருமானார் நபிகள் திலகம் (ஸல்.) அவர்களுடைய திருத்தூதின் மகத்துவம் ஜொலித்து வருகின்றது. ஆகவே, சென்ற ஆண்டுகளைப்போல் நந்தமிழ்நாட்டிலும், இவ்வாண்டு திருநபித் திரு தினத்தைக் கொண்டாடுவதற்கு ஏற்பாடு செய்யவேண்டும்; ஒவ்வொரு ஊர்களிலும் மகாநாடுகள் நடத்தவேண்டும்; அதில் முஸ்லிம்களல்லாதாரும் கலந்துகொள்ளும்படி செய்யவேண்டும்; சகல கோடிமக்களிடையேயும் எம்பெருமானார் சமத்துவத் தூதர் (ஸல்) அவர்களின் திருத்தூது பரவுவதற்கு ஒவ்வொரு முஸ்லிமும் பாடுபடவேண்டும்.

ரபீஉல் அவ்வல் மீ 12-ந்வ (6-7-33) வியாழக்கிழமை யன்றைபதினத்தை இப்புண்ணிய சேவைக்காக ஒய்வு நாளாக ஒதுக்கிவைத்து 'ஸீரத்' மகாநாடு கூட்டுவதற்கும், ஸீரத் பிரசங்கத்தைப் படித்து ஜனங்களிடையே பரவச்செய்வதற்கும், யாவருக்கும் அதனை விநியோகிப்பதற்கும் அரும்பாடு படவேண்டியது நமது கடமையாகும். எம்பெருமானார் (ஸல்) அவர்களுக்குச் செய்யும் பணிவிடையில் இஃது பிரதானமுடையதாகுமென்பதிலய்யமில்லை. "உம்முடைய (முஹம்மது ஸல்) கீர்த்தியைப் பிரபலிக்கச் செய்வேன்" என ஆண்டவன் அருள் செய்ததற்கேற்ப, ஒவ்வொரு திக்குகளிலும், திசைகளிலும், வீடுகளிலும், காடுகளிலும், பட்டிகளிலும், பட்டணங்களிலும் எம்பெருமானார் ஏகத்துவத் தூதர்(ஸல்) அவர்களது பெயர் விளங்கும்படி செய்ய முயற்சிக்க வேண்டியது ஒவ்வொரு முஸ்லிம்கள்மீதும் ஏற்பட்டுள்ள அத்தியாவசியமான கடமையாகும். இவ்வரிய நோக்

கத்தை ஆதரித்து நந்தமிழ்நாடு, சிலோன், பர்மா, பினங், சிங்கப்பூர், ஜாவா, சைகோன் கொச்சின் சைன்' மலாய்நாடு முதலியதேசங்களிலும் இதனைப் பரவச்செய்வதற்கு நுங்கள் 'ஹிபாஜத்துல் இஸ்லாம்' சங்கம் பொருப்பேற்று பணியாற்றி வருகின்றது. எனவே இவ்வாண்டிற்கான வேலைகள் இதுபொழுதிருந்தே ஆரம்பிக்கப்பட்டு நடைபெற்றுவருகின்றது. இவ்வருஷத்திய ஸீரத் பிரசங்கம் மௌலானா மௌலவீ முஹம்மத் ஹபீபுற்றஹ்மான்கான் சாஹிப் ஷெர்வானீ நவாப் சத்ரயார்ஜங் பஹாதுர் (அலீகட்) அவர்களால் தயாரிக்கப்பெற்று அதனை நமது சங்கம் மொழிபெயர்த்து அச்சிட்டுவருகின்றது. ஆகவே, நமது முஸ்லிம்கள் அதில் 1000 கணக்கான பிரதிகளை வாங்கி ஆங்காங்கு வினியோகிப்பதற்கு ஏற்பாடு செய்வார்களென்று எதிர்பார்க்கின்றோம். முற்கூட்டியே அவரவர்களின் ஆடர்களை பதிவுசெய்துகொண்டால் போதிய காலத்திற்கு முன்பே அவர்களுக்குப் பிரதிகள் அனுப்பிக்கொடுக்க சௌகரியமாகயிருக்கும். சென்ற ஆண்டுகளிலனேகர் நெருக்கடியான சந்தர்ப்பத்தில் அநேகமாயிரப் பிரதிகளுக்கு ஆடர் செய்திருந்தும் காப்பிகள் கைவசம் எஞ்சியில்லாததால் அனுப்ப முடியாது போயிற்றென்பது நேயர்களறிந்ததே. ஆகவே நமது முஸ்லிம் நேயர்கள் சென்ற ஆண்டுகளைவிட இவ்வருடம் அப்புண்ணிய்தினத்தை தக்கமுறையில் கொண்டாடுவதற்கு முயற்சிப்பார்களென்று எதிர்பார்க்கின்றோம். காரியதரிசிகள்,

ஹிபாஜத்துல் இஸ்லாம் சங்கம்,
43. A போஸ்டாபீஸ் தெருவு, சென்னை.

---

### தா. இ. ஹாபிஸின் தடுமாற்றம்.

சோதரீர்! ஹாபிஸ் என்பார் 14-4-33-ல் வெளியான தா.இ. வில் ஓர் மார்க்க வினாவுக்கு விடை அளித்திருக்கும் வினோதத்தை இங்கு குறிப்பிடுகின்றேன். அதாவது

(3) வினா, ஒருவன் தன் பெண்ஜாதியைப் பார்த்து நீ என் தாயைப்போலிருக்கின்றாய் என்று சொன்னால் அவளுக்குத் தலாக்கு உண்டாய் விட்டதா? இல்லையா?

(3) விடை, இங்ஙனம் கூறுவது தவறாயினும் இத்னால் விவாக விலக்கைத் தரக்கூடிய தலாக்கு விஷயமொன்றும் உண்டாய் விடுவதில்லை.

இவ்விடை முற்றும் தவறானதேயாகும். வினாவில் குறிப்பிட்டபடி ஒருவன் தன்பெண்ஜாதியை நோக்கி 'நீ என் தாயைப்போலிருக்கின்றாய்' என்று சொல்வானாகில் அதற்கு அவன் என்ன கருத்துக்கொண்டுள்ளானென்று விசாரணை புரியவேண்டும். தலாக் சொல்லும் நோக்கத்துடன் அவ்வாறு கூறியிருப்பானாகில் தலாக் ஏற்பட்டுவிடும்; அல்லது 'லிஹாரை' நாடிச்சொல்லி யிருப்பானாகில் 'லிஹார்' உண்டாய்விடும். அல்லது தாய்க்கு ஏற்பட்டுள்ள மேதை மரியாதைகள் பெண்ஜாதிக்கும் ஏற்பட்டிருக்கிறதென்னும் கருத்துக்கொண்டு அவ்வாறு கூறியிருப்பானாகில் அதனால் ஒன்றுமேற்படமாட்டாது. இவ்வளவு விபரங்கள் பிக்ஹு கிரந்தங்களாகிய ஆலம்கீரி, ஷரஹ்விகாயா, ரத்துல்முஹ்தார் முதலியவைகளில் கூறப்பட்டிருக்கின்றது. இதனை ஒரு சிறிதேனும் தெரிந்துகொள்ளாமல், இவ்வாறு கூறுவதால் ஒன்றும் ஏற்படுவதில்லை என்று ஹாபிஸ் விடை அளித்திருப்பது அவரின் அறியாத்தனமேயாகும். இவ்வாறாக மார்க்க சட்டத்தில் ஹாபிஸ் தவறிழைத்துவிடுவதால் எத்தனை விபரீதங்கள் ஏற்பட்டுவிடுமென்பதை நேயர்கள் நன்குணரவேண்டும். சொன்னவன் தலாக்கையோ, லிஹாரையோ கருதியிருப்பானாயின் ஹாபிஸ் கூற்றுப்படி ஒன்றும் ஏற்படமாட்டாதென்று கருதி அப்பெண்ணுடன் கலந்துறவாடி விடுவானாகில் மாபெரும் பாதகமன்றோ விளைந்துவிடும். தலாக்கின் சட்டதிட்டங்கள் யாவரும் அறிந்ததே. என்றாலும் லிஹாருடைய சட்டதிட்டம் யாதாகுமென்பதை இங்கு குறிப்பிடவேண்டியிருக்கின்றது. 'லிஹார்' ஏற்பட்டு விடுமாயின் கப்பாரா (தெண்ட குற்றம்) செலுத்தும் வரை அப்பெண்ணிடம் கூடுவது ஹராமாகயிருக்கும். அதாவது ஒரு அடிமையை வாங்கி உரிமைவிடவேண்டும். முடியாதவர்கள் துயர்படியாக இரண்டு மாதம் நோன்பு வைக்கவேண்டும். அதற்கும் சக்திபெறாதவர்கள் 60 மிஸ்கீன்களுக்கு அன்னதானம் செய்யவேண்டும். இவ்வாறு திருக்குர்ஆனில் பஹிரங்கமாகக் கூறப்பட்டிருக்கும் விஷயத்தை உதாசீனஞ் செய்வதனால் எத்தனை விபரீதங்கள் ஏற்பட்டுவிடுமென்பதை நன்குணர்வார்களாக.

---

# நாகூர் முபீதுல் இஸ்லாம் பைத்து சபா.

இச்சபா ஸ்தாபகர்களில் ஒருவரும் உப கேப்டனும்
ஜனாப் மு. அப்துல் றஹ்மான் சாயபு மரைக்காயர் அவர்கள் புத்திரருமான
ஜனாப் முஹம்மது நெய்னா மரைக்காயர் அவர்களுக்கும்
ஜனாப் த. செய்யது முகிய்யதீன் சாயபு மரைக்காயர் அவர்கள்
செல்வப் புத்திரிக்கும்
ஹிஜ்ரி 1352ஹு முஹர்றம்மீ 19உ திங்கட்கிழமை இரவு நிகழ்வுற்ற விவாக
வைபவத்தில், மணமகனுக்கு சபா அங்கத்தினர்களால் சமர்பிக்கப்பெற்ற

## சுப மண மங்கள வாழ்த்துப் பத்திரம்.

அஸ்ஸலாமு அலைக்கும் வ றகுமத்துல்லாஹி வ பறகாத்துஹு

**சற்குண மணாளரே!** நிகரற்ற அருளாளனும் அளவற்ற அன்புடையோனுமாகிய அல்லா (ஹ்) வின், கிருபா கடாக்ஷத்தால், சாந்தகுணமும், தூயதன்மை முதலியனவும் ஒருங்கே பொலியப்பெற்ற தங்களுக்கு இன்று நிகழ்வுறும் திருமணம் என்றென்றும் சுப மணமாகுவதாகுக.

**தன்னலமறுத்த பொன்னொளிர் மணியே!** தங்களின் புதிய சகாப்தம் ஆரம்பிக்கும் இவ்வுயரிய தினத்தைப்போலவே ஏனைய நாட்களிலும் தாங்கள் வெற்றிமாலையை அணியவேண்டுமென யாங்கள் யாவரும் ஏகமனதாய் நல்லாசி கூறுகின்றோம்.

**மாண்புமிக்க சோதர!** "மணமக்களிருவர்களும் ஒருவருக்கொருவர் ஆடையைப் போன்றவர்கள்" என்றமையாலும் "ஒருயிருக்கிருடலாயினோர்" என்றமையாலும் தாங்கள் விழையக்கூடிய லௌகிக வைதீக காரியார்த்தங்களில் ஒருவர்க்கொருவர் அத்யந்த அன்போடு துணையாளர்களாக இருக்கும்படியாயும், கல்வி கேள்விகளில் முதிர்ந்த தேர்ச்சி பெற்று சற்புத்திரர்களையீன்று அன்னவர்களும் கல்வித்துறையில் தலைசிறந்து விளங்கும்படியாகவும் எல்லாம் வல்ல இறைவனை முக்காலும் இறைஞ்சுகின்றோம்.

**அளவிற் சிறந்த அண்ணலே!**

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மை யுண்டாக்கப் பெறின்"

என்பதற்கிணங்க நீவீரடைந்த சுபமண சௌந்தரியுடன் பேரன்போடு வாழ்ந்து இல்லற சுகானுபவ சாகரத்தில் மூழ்கி "கடிமலர்க்கொடியுங் கற்பகத்தருவும்" போல் கலந்து அமிர்தானந்தமடைவீர்களாக.

**மரைக்காயர் குல மகிபா!** தாங்கள் நமது சபாவின் உப கேப்டனாக விருந்தபோதினும், அச்சபாவின் காரியங்கள் எல்லாவற்றிற்கும் பொது நலத்தின் காரணமாக தாங்களும் பங்கெடுத்துக்கொண்டீர்கள் என்று கூறுவது மிகையாகாது. எனவே தாங்கள் இதுவரையில் நமது சபாவை ஆதரித்து வந்ததுபோல் இனிவருங்காலத்திலும் ஆதரித்து சபாவின் முன்னேற்றத்திற்குரிய சகல காரியாதிகளிலும் எங்களோடு கலந்துழைக்குமாறு நாங்கள் எல்லோரும் ஏகோபித்துக் கேட்டுக்கொண்டு தங்கள்மீது என்றென்றும் மங்கள வாழ்த்து கூறுகின்றோம்.

**ஏ! சாக்ஷாத் பரமதயாளா!** மாக்ஷிமிக்க சதிபதிகளிருவர்களும் எஞ்ஞான்றும் நினதருண்மடையில் மூழ்கி, ஒத்தொருமித்த மித்திரர்களாய் விளங்கி, நீண்டாயுளும், நிறைந்த செல்வமும், திரேக வண்மையும், புத்திர சந்தானமும் பெற்றுவாழ, நின் அருட் பெருங்கருணையை பாலிப்பாயாக. ஆமீன்.

நாகூர்,
14—5—33.
M. I. B. S.

அங்கத்தினர்கள்,
முபீதுல் இஸ்லாம் பைத்து சபா.

Rowther
Nagamgudi

# ‘யவ்முந்நபி’

## திருநபி தினக்கொண்டாட்டம்

ஏகத்துவத்தூதர் நபிகள் திலகம் (ஸல்.) அவர்கள் அருள் செய்த ஏகத்துவம், அமைதி, கல்வி, சமத்துவம், சகோதரத்துவம், நீதி முதலிய வைகளைத் தெரிந்துகொள்வதற்கும், அதனை மானிடர்களிடையே பரத்துவதற்கும் ரபீஉல் அவ்வல்மீ 12-ந் தேதி (6-7-33)யை ஒதுக்கிவைத்து அன்று சகலவிடங்களிலும் கூட்டம்கூட்டி, முஸ்லிம் அல்லாதாரும் ‘ஸீரத்’ பிரசங்கத்தைக் கேட்டுணர வசதியளிக்க வேண்டும். உங்கள் “ஹிபாஜத்துல் இஸ்லாம்” சங்கத்தாரால் இவ்வாண்டிற்கென்றே தயாரிக்கப்பட்டிருக்கும் “திரு வருள் தூது” என்னும ஸீரத் பிரசங்கத்தை ஏராளமாக யாவருக்கும் வினியோகிக்கவேண்டும். அன்று நடைபெறும் மகாநாடுகளில் வீண் ஆடம்பரம், கெட்டபித்அத்தான காரியங்கள் முதலியன கலந்துவிடாமல் ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளவேண்டும். நபிகள் திலகம் (ஸல்.) அவர்களின் ஹிதோபதேசங்கள் உலகமெங்கும் பரவவேண்டுமென்பதைக் கருதி, அன்று பிரசிங்கப்பதற்கும் வினியோகிப்பதற்காகவுமென்றே தயாரிக்கப்பட்டிருக்கும் இப்பிரதிகளின் கிரயம் மிகச் சொற்பமாகவே வைக்கப்பட்டிருக்கின்றது.

## ‘திருவருள் தூது’

| | | | |
|---|---|---|---|
| 1000 பிரதிகள் | ... | ரூ. | 25 0 0 |
| 500 ஷை | ... | ரூ. | 13 0 0 |
| 250 ஷை | ... | ரூ. | 7 0 0 |
| 100 ஷை | ... | ரூ. | 3 0 0 |

100 பிரதிகளுக்குமேல் ஆடர் செய்பவர்களின் பெயரை அட்டையில் பதிப்பித்துக் கொடுக்கப்படும்.

தபால் செலவு வேறு.

பிரதிகள் வேண்டுவோர் 15-6-33-க்குள் ஆர்டர்செய்து விடுவார்களென்று எதிர் பார்க்கப்படுகின்றது.

இங்ஙனம் :
காரியதரிசிகள்,

**ஹிபாஜத்துல் இஸ்லாம்,**
43, A. போஸ்டாபீஸ் தெருவு, G. T. மதராஸ்.

**Printed** at the Kesari Printing Works & Edited & Published by Moulvi A. R. Abdur Rahim Saheb, Manager, Hifazath-ul Islam, 43 A, Post Office St., G.T., Madras.

